


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Friday, the 9th September 1960.**

The House met in the Assembly Chamber, Fort. St. George, at half past eight of the clock, the Deputy Speaker (SRI M. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

DEPUTY SPEAKER : I think the Hon. Minister for Home is not here.

THE HON. SRI R. VENKATARAMAN : I would suggest that all questions to be answered by the Hon. Minister for Industries and the Hon. Minister for Public Works be taken up first. All questions to be answered by the Hon. the Home Minister may be taken up later.

DEPUTY SPEAKER : All right.

*Mettur lake*

* 554 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. KALYANASUNDARAM) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) the rate of inflow of water in Mettur lake during June and July 1960;

(b) how this compares with the inflow for the same period during the previous three years; and

(c) whether there is fall in the inflow, and if so, the reasons therefor?

THE HON. SRI P. KAKKAN :

(a) June ... 7,400 cusecs.
July ... 27,804 cusecs.

(b) The inflows during June and July 1960 were comparatively low and very poor in June.

(c) Yes, Sir. The reason is due to comparatively poor incidence of rainfall and its distribution in the Cauvery catchment.

*Backward Classes*

* 558 Q.—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) the list of Backward Classes for whom scholarships were given by the Central Government, the State list in general and that of the Kanyakumari district in particular;

[9th September 1960

(b) whether the Central Government have intimated to the State Government the list of Backward Classes of the former Travancore-Cochin State comprising the present Kanyakumari district, for whom scholarship was given by the Central Government; and

(c) if so, the details thereof?

THE HON. SRI P. KAKKAN : (a) to (c) The Government of India have communicated the lists. A statement containing the lists of "Other Backward Classes" recognized for Government of India scholarships (i) for Madras State excluding Kanyakumari district and Shencottah taluk of Tirunelveli district, and (ii) for Kanyakumari district and Shencottah taluk of Tirunelveli district, is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : மேஜையின்மீது வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையிலே 93-வது எண்ணிக்கையில் "Male" என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. அப்படியென்றால் ஆண்கள் கூட பிற்பட்ட இனத்தில் சேர்க்கப் பட்டிருக்கிறார்களா ?

THE HON. SRI P. KAKKAN : ஒரு ஜாதியின் பெயர் "Male" என்று இருக்கிறது.

SRI T. S. RAMASWAMI : இதிலே குறிப்பிட்டிருக்கக்கூடிய பாக்வார்ட் கிளாஸ் மாணவர்கள் எல்லோருக்கும் ஸ்காலர்ஷிப் கொடுப் பதற்கான "பாரமே" அவர்கள் படிக்கும் கல்லூரிக்கு வரவில்லை என்ற புகார் வந்ததா ? தயவு செய்து இதிலே குறிப்பிட்டிருக்கிற பிற்பட்ட வகுப்பு மாணவர்களுக்கு எல்லாம் முன்னதாகவே அரசாங்கம் தகவல் அனுப்புவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : பின் தங்கிய வகுப்பினருக்கு முன்னதாகவே கொடுக்கப்படவேண்டுமென்றுதான் எல்லாக் கல்லூரி பிரின்சிபாலுக்கும் இன்ஸ்ட்ரக்ஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட இடத்தில் கொடுக்கப்படவில்லை என்ற தகவல் கொடுத்தால் அதைப்பற்றி விசாரிக்கப்படும்.

SRI P. G. MANICKAM : சென்னை சர்க்காரிலே மோஸ்ட் பாக் வார்ட் கம்யூனிடி என்பதை இந்திய சர்க்கார் அங்கீகரித்திருக்கிறதா ? இல்லையா ?

THE HON. SRI P. KAKKAN : மத்திய அரசாங்கம் மோஸ்ட் பாக் வார்ட் கம்யூனிடிக்கு அங்கீகாரம் அளித்திருக்கிறார்கள்.

SRI V. SUBBIAH : முன்பெல்லாம் ஸ்காலெர்ஷிப்புகள் டைரக்டர் அவர்களே கொடுத்துவந்தார்கள். இப்பொழுது ஜில்லாவிலே கொடுத்து வருகிறார்கள். அதன் விவரம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : முன்பு டைரக்டர் அவர்களே கொடுத்து வந்தார்கள். காலதாமதம் ஏற்படுகிறது என்று துரிதமாக அவைகளைக் கொடுக்கவேண்டுமென்பதற்காக அந்தந்த ஜில்லாக்களில் உள்ள மாணவர்களுக்கு உடனடியாகக் கொடுக்கப்படவேண்டுமென்பதற்காக அந் தந்த ஜில்லாக்களில் உள்ள ஹரிஜன அதிகாரிகளிடம் கொடுத்து உதவி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI A. VEDARATHNAM : மேஜையின் மீது வைக்கப்பட்டிருக் கும் அறிக்கையைப்பார்த்தால் இதில் கிட்டத்தட்ட 318 ஜாதிகள் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. நம் நாட்டில் இருக்கும் ஜாதிகளில், இப்பொழுது

a Printed as Appendix I on pages 588–591 infra.

9th September 1960]

குறிப்பிட்டிருக்கும் ஜாதிகள் போக பாக்கி கொஞ்சம்தான் இருக்கும். ஆகையால் இந்த ஜாப்தாவை நீக்கிவிட்டு எந்த வகுப்பில் ஏழையாக இருக்கிறார்களோ அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுப்பதற்கு அரசாங்கம் உத்தேசிக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : அரசாங்கம் நன்றாகப் பரிசீலனை செய்து பொருளாதாரத்துறையில், சமுகத்துறையில், கல்வித்துறையில் மிகவும் பிற்போக்காக எந்த ஜாதியிருக்கிறதென்று பார்த்து முடிவு செய்திருக்கிறார்கள். இதைப்பற்றி ஸ்ரீ கோபாலசாமி ரிபோர்ட் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது.

SRI T. S. RAMASWAMI : இப்பொழுது மத்திய சர்க்காரிடமிருந்து வந்திருக்கும் லிஸ்டில் அதிகமான கம்யூனிடிகள் இருக்கின்றன. கன்யாகுமரி ஜில்லாவிலும், டிரான்ஸ்பர்டு டெரிடரிகளில் உள்ள கல்லூரிகளுக்கும் இந்த லிஸ்டை அனுப்புவார்களா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : இந்த லிஸ்ட் எல்லாக் கல்லூரி பிரின்சிபால்களுக்கும் அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI K. VINAYAKAM : இன்றைய அரசியல் சட்டப்படி ஒரு விதியடிப்படையில் பிரசிடென்ட் அவர்கள் பாக்வேர்ட் க்ளாஸஸ் கமிஷன் ஒன்றை நியமிக்கவேண்டுமென்று சொல்லி அதன்படி பாக்வேர்ட் க்ளாஸஸ் கமிஷன் ஒன்று நியமிக்கப்பட்டு அது இரண்டு ஆண்டுகள் நாடு முழுவதும் சுற்றுப்பிரயாணம் செய்து அவர்கள் தயாரித்த ரிப்போர்ட்டை, காக்கா சாகேப் கலேல்கர் அவர்கள் தலைமையில் அமைந்த பாக்வேர்ட் க்ளாஸஸ் கமிஷன் அறிக்கையை இன்னும் மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்ளாமல் இருக்கக் காரணம் என்ன ? நமது ராஜ்ய பிற்பட்ட இனத்தவர்கள் சார்பில் அவர்கள் நலனுக்காக அதை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நமது அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை வற்புறுத்துமா ?

THE HON. SRI P. KAKKAN : பாக்வேர்ட் க்ளாஸஸ் கமிஷன் ரிப்போர்ட்டை அங்கீகரிப்பதும், அங்கீகரிக்காதிருப்பதும் பார்லிமென்டைப் பொறுத்தது. அவர்கள்தான் செய்ய வேண்டும். அங்கத்தினர் அவர்கள் பார்லிமென்ட் அங்கத்தினர் யாரையாவது கொண்டு கேள்வி போடச் சொன்னால் அங்கு அதற்கு பதில் சொல்லப்படும்.

SRI S. RANGANATHA MUDALIAR: Does not the perpetuation of these distinctions militate against the policy of the Government in regard to the abolition of castes and casteism?

THE HON. SRI P. KAKKAN : No, Sir. The Government have to look after the welfare of the poor and Backward Communities in the State.

SRI K. R. VISWANATHAN : இந்த நாட்டில் ஜாதி வேறுபாட்டை அகற்றுவதற்காகவே பொருளாதாரத் துறையிலும், கல்வித்துறையிலும் பின்தங்கிய வகுப்பு மக்களுக்காக இந்த உதவி செய்யப்படுகிறது என்பது உண்மையா ? இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கிற பட்டியலில் இரண்டாவது லிஸ்டில், 66-ல் குறிப்பாக நாயுடு என்ற இனம் பிற்பட்ட வகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அது கன்னியாகுமரி, செங்கோட்டைப் பகுதிகளில் உள்ள நாயுடு என்ற பகுதியினரை என்று நினைக்கிறேன். இப்பொழுது கன்னியாகுமரி, செங்கோட்டைப் பகுதிகள் சென்னையோடு சேர்க்கப்பட்டுவிட்ட காரணத்தால் நாயுடு என்று சொல்கிறவர்கள் சென்னையில் இருந்தாலும் அவர்களையும் பிற்பட்ட இனத்தில் சேர்க்கவேண்டுமென்று விண்ணப்பம் வரும்போது அதை எப்படி சர்க்கார் அனுமதிக்கிறார்கள் என அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அங்கத்தினர் அவர்கள் சொல்லியபடி, பின்தங்கிய மக்களின் குழந்தைகளுடைய படிப்பிற்காக இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கேரள மாநிலத்திலிருந்து வந்திருக்கிற பகுதிகளில் எவ்வாறு அவர்களை அங்கு பாக்வேர்ட்

[9th September 1960

கம்யூனிட்டி என்று குறிப்பிட்டார்களோ அதை அங்கீகரித்து சர்க்கார் அதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இங்கிருப்பவர்களையும் அங்குள்ளவர்களோடு சேர்க்க வேண்டுமென்பதல்ல.

SRI A. A. RASHEED : In the list placed on the table of the House, under item 93, we find " Male ". May I know whether all males are considered as Backward Classes? (Laughter.)

**(No answer.)**

**SRI A. R. MARIMUTHU :** பின் தங்கிய வகுப்பினருக்கு ஸ்காலர்ஷிப் கொடுப்பதற்கு ஜில்லா கலெக்டர்களுக்கு அதிகாரம் கொடுத்திருப்பதாகக் கூறினார்கள். ஜில்லாக் கலெக்டர்கள் அந்தந்த ஜில்லாவைச் சேர்ந்த மாணவர்களின் மனுக்களைப் பரிசீலனை செய்ய அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறதா அல்லது அந்த ஜில்லாவிலுள்ள கல்லூரிகளில் படிக்கும் மாணவர்களின் மனுக்களை பரிசீலனை செய்ய அதிகாரம் உள்ளதா ?

**THE HON. SRI P. KAKKAN :** அந்தந்த ஜில்லாக்களில் உள்ள கல்லூரிகளில் படிக்கும் மாணவர்களின் மனுக்களைப் பரிசீலனை செய்யலாம்.

*Tanks (Madurai district)*

*559 *Q.*—**SRI N. R. THIAGARAJAN :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் மதுரை ஜில்லாவில் எத்தனை குளங்கள் மராமத்து செய்ய திட்டமிடப்பட்டது ?

(ஆ) அதில் எத்தனை மராமத்து வேலைகள் முடிந்துள்ளன ?

(இ) இன்னும் எத்தனை முடியவில்லை ?

(ஈ) இவை எப்பொழுது முடியும் ?

**THE HON. SRI P. KAKKAN :** (*a*) Two hundred and seventy-eight.

(*b*) One hundred and five.

(*c*) & (*d*) One hundred and seventy-three—

| | |
|---|---|
| Before March 1961 ... | 99 |
| 1961–62 ... ... | 14 |
| 1962–63 ... ... | 27 |
| 1963–64 ... ... | 33 |
| | 173 |

DEPUTY SPEAKER : Now that the Hon. Minister for Home has come, we can take up question No. 552.

9th September 1960]

*New Railway lines*

* 552 *Q.*—SRI S. M. ANNAMALAI :
SRI M. KALYANASUNDARAM
SRI A. VEDARATHNAM : } கனம் உள்

விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) நட்சத்திரக் குறியிடாத கேள்வி எண் 518-க்கு 1960-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 30-ந் தேதியில் அளித்த பதிலை ஒட்டி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் துவக்கப்படவிருக்கும் புதிய ரயில்வே பாதைகள் எவை என்பதைக் குறித்து மத்திய சர்க்காரின் முடிவு தெரிந்துவிட்டதா ?

(ஆ) அப்படியானால், அதன் விவரம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI : அவர்கள் ஒத்துக் கொள்ளாததற்குக் காரணங்கள் என்ன ? இப்பொழுதாவது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சில ரெயில் பாதைகளைச் சேர்க்கவேண்டுமென்று இந்த சர்க்கார் சிபாரிசு செய்திருக்கிறார்களா ? அப்படியாயின் அவைகள் யாவை?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவர்கள் ஒத்துக் கொள்ளாததற்குக் காரணம், பணம் இல்லை என்பதுதான். அது பற்றி, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் விவாதிக்கப்படும்போது விவாதிக்கப் படும். சமீபத்தில் நாஷனல் டெவலப்மெண்ட் கௌன்ஸில் கூட்டம் இருக் கிறது. அங்கும் இந்தப் பிரச்னை விவாதிக்கப்படும்.

SRI S. M. ANNAMALAI : சில நாட்களுக்கு முன்னால் ரெயில்வே துணை அமைச்சர் அவர்கள் இங்கு வந்தபோது நமது அமைச்சர் அவர்கள் அவர்களோடு விவாதித்ததாகத் தெரிகிறது. அப்படியானால், அவர்களோடு விவாதித்ததின் முடிவு என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சென்னையில் ரெயில்வே துணையமைச்சரோடு நான் விவாதித்தது, மின்சார ரெயில் பற்றி. உதவி அமைச்சர் அவர்களை டெல்லியில் சந்தித்துப் பேசியபோது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சில லைன்களையாவது நம் ராஜ்யத்தில் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று பேசிக் கொண்டிருந்தேன்.

SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி நேற்று பேசுகிற நேரத்தில் இண்டஸ்ட்ரியல் கம்மாடிட்டீஸ்க்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட்டார்கள். அதை விட அக்கிரிகல்ச்சரல் கம்மாடிட்டீஸ் அவசியமான தல்லவா ? ஆகவே பல வருடங்களுக்கு முன்பாகவே, மன்னார்குடி-திருத்துறைப்பூண்டி, பட்டுக்கோட்டை-தஞ்சாவூர் லைன்கள் பாக்கியிருக்கின்றன. இதற்கு முக்கியத்துவம் கொடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தொழில் தேவையா, விவசாயம் தேவையா என்ற போட்டா போட்டி இல்லை. அங்கத்தினர் அவர்கள் குறிப்பிடுகிற லைன்கள், திருத்துறைப்பூண்டி-மன்னார்குடி, பட்டுக் கோட்டை-தஞ்சாவூர் லைன் அவசியம் என்றாலும் அவ்வளவு அவசரம் என்று நான் சொல்வதற்கில்லை. அதை விட அவசரமாகக் கவனிக்க வேண்டிய லைன்கள் தமிழ் நாட்டில் சிலயிருக்கின்றன. அதை நாங்கள் வற்புறுத்திக்கொண்டிருக்கிறோம்.

[9th September 1960

SRI M. KALYANASUNDARAM : மிக அவசரமான லைன்கள் என்று எவற்றை அரசாங்கம் கருதுகிறது ? அவை மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படும் என்கிற நிச்சயமிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மிக அவசரமாகக் கருதப்படுவதில், முதலாவது நாங்கள் இப்பொழுது யோசிப்பது, சேலம்-பங்களூர் லைன். இரண்டாவது, ராமநாதபுரம் ஜில்லாவில் முதுகுளத்தூர் போன்ற இடங்களில் ரெயில்வே இல்லாதயிடங்களில் ரெயில் போடுவது பற்றி. அதில், "செக்யூரிட்டி" காரணமும் இருக்கிறது. மூன்றுவது, வேறு சில லைன்கள். மறுபடியும் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் பற்றி விவாதிக்கும் போது இவற்றை யெல்லாம் வற்புறுத்தலாம் என்று தான் நாங்கள் உத்தேசிக்கிறோம்.

SRI S. M. ANNAMALAI : மின்சார ரெயில் பாதை பற்றிப் பேசியதாகச் சொன்னார்கள். அப்படியானால் அந்த மின்சார ரெயில்பாதைகள் எவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பின்னால் இது பற்றி கேள்வி வருகிறது, அப்பொழுது சொல்கிறேன்.

SRI R. SRINIVASA IYER : தொழில் துறை அபிவிருத்தியாகும் இடங்களில் புது ரயில்வே லைன் போட ஆரம்பிப்பது அவசியம் என்று சொல்லப்படுகிற நேரத்தில், கடலூரிலிருந்து சேலம் வரையில் நெய்வேலி வழியாக உள்ள இருப்புப் பாதைகளை இரட்டிப்பாக்குவதற்கும், மதருஸ்-விழுப்புரம் ரயில் பாதையை இரட்டிப்பாக்குவதற்கும் வழி ஏற்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதெல்லாம் உத்தேசத்தில் இருக்கிறது. ப்ரயாரிட்டி பிரகாரம் நாம் முடிவு செய்ய வேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் புது ரெயில்வே பாதைகள் போடுவதற்காக இந்தியா பூராவும் 156 கோடி ஒதுக்கியும் நமது தமிழ் நாட்டில் ஓடக் கூடிய ரெயில்வேக்கு ஒரு நயா பைசா கூட செலவழிக்கப் படவில்லை என்ற விவரத்தை மத்திய அரசாங்கத்திடம் நம் அரசாங்கம் தெரியப்படுத்தினார்களா ? அப்படித் தெரியப்படுத்தியிருந்தால் என்ன பதில் கிடைத்தது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவர்களிடம் தெரியப்படுத்திக்கொண்டே யிருக்கிறோம். ஸோனல் கௌன்ஸில் கூட்டத்தில் கூட இதுபற்றி குறிப்பிடப்பட்டது. கிடைத்த தொகை குறைவு. இதைக் கொண்டு அவசரமான ரெயில்வேயை எடுக்கிறோம் என்று சொல்கிறார்கள். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட "டிறுப்ட் ப்ளானை"ப் பார்த்தால் தென் ராஜ்யங்களில் ஒரு ராஜ்யத்தில் கூட ஒரு லைன் கூட இல்லை. அப்படி ஒவ்வொன்றுக்கும் கொடுக்கவேண்டுமென்று வற்புறுத்திக் கொண்டிருக்கிறோம்.

SRI P. S. CHINNADURAI : சத்தியமங்கலம்-சாம் ராஜ நகர் இணைப்புப் பாதையை இந்த மூன்றுவது திட்ட காலத்தில் ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று நம் ராஜ்ய அரசாங்கம் மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நாங்கள் அளித்த யோசனைகளில் இதுவும் ஒன்று. மறுபடியும் சொல்கிறேன்—ப்ரயாரிட்டி பிரகாரம் முடிவு செய்யவேண்டும்.

SRI K. VINAYAKAM : May I know at what stage the proposal for doubling the railway line from Madras to Jalarpet (via) Arkonam stands? May I also know whether there is any proposal to electrify the entire railway line?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is a proposal to electrify the broad-gauge line. But as to the stage at which the proposal to double the railway line stands, I would like to have notice.

9th September 1960]

SRI T. S. RAMASWAMI : ரயில் பாதையே இல்லாத கன்னியாகுமரி ஜில்லாவில் ரயில் பாதை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன், திருநெல்வேலி முதல் கன்னியாகுமரி வரை ரயில் பாதை போட வேண்டும் என்று தீர்மானித்து அதற்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் முதலிடம் கொடுத்திருந்ததாகவும், பின்னால் அது ஆருவது இடத்திற்கு வந்து விட்டதாகவும் சொல்லப்படுகிறதே, அது உண்மையா ? அப்படியானல் அதற்குக் காரணம் என்ன ? அவ்விதம் ஆருவது இடத்தில் போட்டிருந்தால் அதை மாற்றி முதலிடத்தில் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புதிய ரயில்வே லைன்கள் போடுவதைப் பற்றி ரயில்வே உதவி மந்திரியுடன் பேசிக் கொண்டிருந்ததைப்பற்றி சற்று முன்பு சொன்னேன். அதில் முதலிடம் சேலம்-பங்களூர் பாதைக்கும், இரண்டாவது இடம் மானமதுரை-அருப்புக் கோட்டை பாதைக்கும் வற்புறுத்தப்பட்டிருக்கிறது என்று சொன்னேன். அதற்கு மேலாக மூன்ருவது இடத்தைப்பற்றி தகராறு இருக்கவேண்டாம் என்று நினைத்துச் சொல்லவில்லை. மூன்ருவது இடமாக திருநெல்வேலி-கன்னியாகுமரி பாதையை வற்புறுத்துவது என்பது தான் என்னுடைய உத்தேசம்.

*Satyagraha (Socialists)*

* 553 *Q.*—SRI P. S. CHINNADURAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விலைவாசிகளைக் கட்டுப்படுத்தக் கோரியும், மற்றும் பல கோரிக்கைகளுக்காகவும் தமிழ் நாட்டின் சோஷலிஸ்டுகள் சர்க்கார் காரியாலயங்களின் முன்பாக சத்தியாக்கிரகம் நடத்தினர்களா ?

(ஆ) அவ்வாறு சத்தியாக்கிரகம் நடத்தியவர்களை சர்க்கார் கைது செய்தார்களா ?

(இ) அப்படியானல், அவர்களின் எண்ணிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Yes, Sir.

(*c*) 367.

SRI P. S. CHINNADURAI : இந்த சத்தியாக்கிரகத்தின்போது கைது செய்யப்பட்ட சோஷியலிஸ்டுகள் சிறையில் எந்த முறையில் நடத்தப்பட்டார்கள், அவர்கள் அரசியல் கைதிகள் என்ற முறையில் நடத்தப்பட்டார்களா அல்லது மற்ற சாதாரண கிரிமினல் கைதிகளைப்போல் நடத்தப்பட்டார்களா என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு தனிக் கேள்வி வேண்டும்.

*Railways (electrification)*

* 555 *Q.*—SRI T. SAMPATH : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the stage at which the scheme of electrification of railway line between Tambaram and Villupuram stands;

(*b*) whether the scheme would be implemented before the end of the Second Five-Year Plan; and

(*c*) what power would be used, whether A.C. or D.C.?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) to (*c*) Our information is that the scheme of electrification of railway line between Tambaram and Villupuram has already been started

[9th September 1960

during the Second Five-Year Plan period and that the ancillary Civil Engineering works connected with the scheme have been practically completed. The system of electrification whether A.C. or D.C. to be adopted is under consideration of the Railway Administration.

SRI T. SAMPATH: May I know, whether the scheme will be completed before the end of the Second Plan period?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: We had recently discussions with the Union Deputy Railway Minister, engineers and officers of the Railways. I am not in a position to say that the scheme would be completed. But they are still groping with it and there seems to be no definite decision regarding the point, whether it is to be A.C. and what is to be done and all that.

SRI R. SRINIVASA IYER: ஸார், சமீபத்தில் பரிசீலிக்கப் பட்ட குழு செய்த முடிவில், முன் மதராஸ்-விழுப்புரம் வரைக்கும் மின்சார ரயில் போடுவதாக இருந்ததை இப்போது செங்கல்பட்டு வரைக்கும்தான் என்று மூன்ருவது திட்ட அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறது. போஸ்ட் அண்ட் டெலிகிராப் டிப்பார்ட்மெண்டுக்கு இருக்கக்கூடிய வசதிக்குறைவிஞல் மூன்று ஆண்டுகள் காலதாமதம் ஆகும் என்றுசொல்லப்படுகிறது. ஆகவே ஸ்டேஜ் 1, ஸ்டேஜ் 2 என்ற முறையில் மதராஸ்-செங்கல்பட்டு, பின்னுல் செங்கல்பட்டு-விழுப்புரம் என்ற அளவிலாவது மின்சார ரயில் நிறுவுவதற்கு இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை வற்புறுத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்போது தாம்பரம் வரைக்கும் மின்சார இணைப்பு இருக்கிறது. விழுப்புரம் வரை இதைக் கொண்டு போக வேண்டும் என்பது தான் திட்டம். ஆனுல் பல டெக்னிக்கல் கஷ்டங்களை எடுத்துச் சொல்லுகின்றுர்கள். இப்போது தாம்பரம்-செங்கல் பட்டு, செங்கல்பட்டு—விழுப்புரம் என்ற முறையில் எடுத்துக்கொள்ளலாம் என்று சொல்லுகின்றுர்கள். அதை நாம் மறுத்துச்சொல்லுவதற்கில்லை. சீக்கிரத்தில் இதைப்பற்றி ஒரு முடிவு செய்வதாகச் சொல்லியிருக்கின்றுர்கள். என்னைப் பொறுத்தவரையில் இந்த ராஜ்யத்திலுள்ள மக்கள் இதில் காலதாமதப்படுத்தக்கூடாது என்று வற்புறுத்தி வருகின்றுர்கள் என்று சொல்லியிருக்கின்றேன்.

*556 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்திலுள்ள எந்தெந்த ரயில் பாதைகளை (மின் சார மயமாக்கும் திட்டங்கள்) சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிருர்கள் ?

(ஆ) இத்திட்டங்களிலே எந்தெந்த திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வர மத்திய சர்க்கார் சம்மதித்திருக்கிருர்கள். ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) (1) Tambaram-Villupuram-Tiruchirappalli Section.

(2) Madras-Arkonam Section.

(3) Chingleput-Kancheepuram Section.

(*b*) Tambaram-Villupuram Section.

9th September 1960]

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that there has been inordinate delay in taking up the electrification work in our State and if so, may I know the reason? Also, will the Government impress on the Central Government to take up this work as immediately as possible so that it could be completed within two years?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have just explained the position and I believe taht the Hon. Member has also followed it.

SRI P. G. MANICKAM : ஸார், இவை சம்பந்தமாக மத்திய சர்க்கார் ரயில்வே உதவி மந்திரியுடன் நமது அமைச்சர் அவர்கள் சம்பாஷணை நடத்தியதாகத் தெரிவித்தார்கள். எவைகளைப்பற்றி எல்லாம் பேசினார்கள் என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நம்மைப் பொறுத்தவரையில், சீக்கிரத்தில் இவைகள் எல்லாம் நடைபெற வேண்டும் என்று வற்புறுத்தினேன். இதில் சொல்லப்படுகின்ற டெக்னிக்கல் கஷ்டங்களைப்பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம். பொதுவாக இந்த ராஜ்யத்திலுள்ள மக்கள் இதைத் தாமதப்படுத்தக்கூடாது என்று வற்புறுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்ற அபிப்பிராயத்தை நான் வற்புறுத்திச் சொன்னேன்.

SRI R. SRINIVASA IYER : ஸார், மதராஸ்-விழுப்புரம் பாதையை மின்சார ரயில் பாதையாக்க வேண்டும் என்கிற திட்டம் முதலாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலிருந்தே பேசப்பட்டு வருகிறது. அதாவது சுமார் 10 வருட காலமாகப் பேசப்பட்டு வருகிறது. இதில் போஸ்ட்-அன்ட்-டெலிகிராப் டிப்பார்ட்டுமெண்டுக்கு ஏதோ கஷ்டம் இருக்கிறது, அதை நிவர்த்தி செய்வதற்கு ஏதாவது நடவடிக்கை எடுத்து சீக்கிரத்தில் இதை எடுத்து நடத்த முடியுமா ? போஸ்டல் டிப்பார்ட்மெண்டுக்கு வேண்டிய கேபிள் எல்லாம் வர வேண்டுமென்றால் இன்னும் எவ்வளவோ காலதாமதம் ஆகும். ஆகவே இதைச் சீக்கிரமாக எடுத்துக்கொள்ள சென்னை அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை வற்புறுத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போஸ்டல் டிப்பார்ட்மெண்டுக்கு இருக்கக் கூடிய கஷ்டம் ஒரு பக்கத்தில் இருக்கிறது. அது மட்டுமல்ல, இதில் நான் கடைசியாகத் தெரிந்து கொண்ட விபரம் என்னவென்றால், இதை எல்லாம் எ.ஸி. கரண்டிலேயே போடுவதாக முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது. இதனால் சில கஷ்டங்கள் இருப்பதாகவும் தெரிவிக்கப்படுகிறது. ஆகவே முதலாவதாக செங்கல்பட்டிலிருந்து விழுப்புரம் வரை எடுத்துக்கொள்ளலாம் என்றும் யோசிக்கப்பட்டு வருகிறது. இதில் எல்லாம் சீக்கிரமாகவே ஒரு முடிவு ஏற்படும் என்று நினைக்கிறேன்.

### *Goats*

* 557 *Q*.—SRI S. NAGARAJA MONIGAR : Will the Hon. the Minister for Home be pleased to state the number of goats in (i) Krishnagiri taluk, (ii) Hosur taluk, both before the Government taking over the Mittah forests and a year after taking over the Mittah forests?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mittah forests were taken over by the Government on 15th October 1951. Figures about the number of goats in Krishnagiri and Hosur taluks according to the Livestock Census conducted in May 1951 and in 1956 are indicated below as Livestock Census is not taken every year :—

| *Year.* | | *Krishnagiri.* | *Hosur.* |
|---|---|---|---|
| 1951 | .. | 108,039 | 841,207. |
| 1956 | .. | 52,375 | 32,857. |

[9th September 1960

**Sri S. NAGARAJA MONIGAR**: இப்போது கூறிய புள்ளி விவரங்களிலிருந்து வெள்ளாடுகள் ஒன்றுக்குப் பாதியாக குறைந்திருப்பதை சர்க்கார் கவனிக்குமா ? வெள்ளாடுகளைப் பெருக்குவதற்குரிய திட்டம் ஏதாவது அரசாங்கத்தினிடம் இருக்கிறதா ? அப்படியானால் மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுக்கப்போவதாக சர்க்கார் உத்தேசித்திருக்கிறார்கள் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இப்போதுள்ள புள்ளி விவரங்களின்படி குறைவாகவே தான் இருக்கிறது என்பது தெரிகின்றது. ஆனால் பொதுவாக ஆடுகளை வளர்க்கவேண்டும் என்பதில் சர்க்கார் கவனம் செலுத்தி வருகிறது. ஆட்டுப் பண்ணைகள் சர்க்காரால் நடத்தப்பட்டு வருகிறது. தேசிய வளர்ச்சித் திட்டத்தின் கீழும் இதற்கு ஆதரவு அளிக்கப்பட்டு வருகிறது. ஆனால் வெள்ளாடுகள் குறைந்தால் நாட்டுக்கு க்ஷேமம் என்று தான் சர்க்கார் கருதுகிறது.

Sri M. RANGANATHA MUDALIAR : Sir, we all know that goats are enemy No. 1 to forests. Recently there was a policy indicated by the Government of India to liquidate goats and in their place to encourage the rearing of sheep. Do the Government propose to do anything by way of liquidation of goats?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : As I have pointed out, the Government need not do anything in the matter. Even without Government doing anything, their number is dwindling. I only stated a little while ago that that has to be welcomed.

*Power drills*

* 560 Q.— Sri K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number and the various kinds of power drills owned by the State at present;

(*b*) the number and kind of power drills required for implementing the Third Five-Year Plan Scheme in all the districts in the State; and

(*c*) the steps taken to provide these drills?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) It is presumed that the Member refers to power drills required for sinking tube-wells. Thirty-two power drills as noted below are owned by the State Agricultural Department :—

| *Kind.* | *Number.* |
|---|---|
| 72 Speed Star drills ... ... ... ... | 7 |
| 24 L. Ruston type drills ... ... ... | 2 |
| 22 R. W. drills ... ... ... ... | 9 |
| 22 W. drills ... ... ... ... | 5 |
| 33 W. drills ... ... ... ... ... | 2 |
| 33 Walkerner drills (one Rotary and one Percussion) ... ... ... ... | 2 |
| Joy Rotary drill ... ... ... ... | 1 |
| Armstrong Steam Engine Converted as Diesel drill ... ... ... ... | 1 |
| Calyx drills ... ... ... ... ... | 3 |
| Total ... | 32 |

9th September 1960]

(b) Eight more Percussion drills and 6 more Rotary drills.

(c) Sanction has already been accorded for the purchase of these drills. In regard to the purchase of 8 Percussion drills and one Rotary drill, release of foreign exchange by the Government of India is awaited. Action for the purchase of 5 Rotary drills is being taken by the Director of Agriculture.

SRI V. SUBBIAH : ஸார், இந்த பவர் ட்ரில் மெஷின் சாதாரணமாக நீர் வரண்டு போன இடங்கள், பாறையுள்ள இடங்கள், இந்த இடங்களுக்குத் தான் தேவைப்படுகிறது. ஆனால் போதிய அளவு கொடுக்கப்படுவதில்லை என்று தெரிகிறது. ஆகவே இப்படிப்பட்ட இடங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து இந்த மெஷின்களைக் கொடுக்க வேண்டும் என்று சர்க்கார் உத்தரவு போடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்படிப்பட்ட பிரதேசங்களுக்கு எல்லாம் வாங்க வேண்டுமென்று திட்டம் இருக்கிறது. இவைகளை அதிகமாக வரவழைக்க வேண்டுமென்றால் அந்நிய நாட்டு செலாவணி அதிகமாக தேவைப்படும். ஆகவே இதைப் பற்றி மத்திய அரசாங்க நிதி அமைச்சரிடம் சொன்னேன். அவர்களும் இதில் ஒரு பகுதி தருவதாகச் சம்மதித்து இதற்கு சாங்க்ஷன் செய்திருப்பதாகவும் தெரிகிறது. புதிதாக எங்கெல்லாம் இந்த மெஷின் வேண்டும் என்ற அவசியமிருக்கிறதோ அங்கெல்லாம் கொடுக்கப்படும்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : ஜில்லாவாரியாக எத்தனை டிரில்கள் வைத்திருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா ? 9-0 a.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றித் தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI M. D. THIAGARAJA PILLAI : ரோட்டரி மெஷின்கள் தண்ணீர் இறைவைக்கு உபயோகமாக இருக்கிறது. அவைகளை டெஸ்ட் செய்வதற்கு பம்ப்கள் இல்லை. பம்ப்கள் இல்லாததால் ஒரு ரோட்டரியை ஒரு இடத்தில் போட மூன்று மாதம் வரையில் தாமதம் ஆகிறது. அம்மாதிரி இடங்களில் பம்ப் செட் வைத்து டெஸ்ட் செய்ய ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றியும் அரசாங்கம் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறது.

*Rice Mills*

*561 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் வடாற்காடு மாவட்டம், போளூர் தாலூகா, களம்பூர் கிராமத்திலிருந்து ரைஸ் மில் லைசென்ஸ் கோரி எத்தனை விண்ணப்பங்கள் வந்துள்ளன ?

(ஆ) 1958-ம் ஆண்டு ரைஸ் மில் லைசென்ஸ் வழங்கும் சட்டத்தின்படி தள்ளுபடி செய்யப்பட்ட மனுதாரர்கள் மறுபடியும் விண்ணப்பங்கள் கொடுத்துள்ளார்களா ?

(இ) அப்படியானால், எத்தனை பேர் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) to (*c*) The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

[9th September 1960

*Name Boards (English)*

* 562 *Q.*—**Sri P. S. CHINNADURAI**: கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) ஆங்கில அழிப்புப் போராட்டம் நடத்திய சோஷலிஸ்டுகள் மீது, கி.பு.கோ. 107-வது செக்ஷன்படி போலீஸார் வழக்குத் தொடர்ந்தார்களா?

(ஆ) அவ்வாறு போலீஸார் வழக்குத் தொடருவதற்கு சர்க்கார் சம்மதம் தெரிவித்தார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**Sri K. R. NALLASIVAM**: கோவையில் இது போல் சத்தியாக் கிரகம் செய்தவர்கள் மீது கேஸ் போடப்பட்டு கேசுகளும் நடந்துகொண்டிருக் கின்றன. சர்க்கார் இதைப் பற்றி விசாரணை செய்து 107-வது செக்ஷன் கீழ் போட்டிருப்பதை வாபஸ் செய்து கொள்வார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: என்னிடம் உள்ள தகவல் 107-வது செக்ஷன் தவிர மற்ற செக்ஷன்களின் கீழ் தான் போடப் பட்டிருக்கிறது என்பது.

**Sri A. A. RASHEED**: Sir, is it not a fact that it is the fundamental right to have the name boards in whatever language one likes? Why should not Government take action against such persons?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: The Government have been taking such action as they are advised to take in these matters.

*Pamban channel*

* 563 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN**: Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether it is a fact that the deepening of the Pamban channel was left incomplete in 1959; and

(*b*) if so, when it will be completed?

**The Hon. Sri P. KAKKAN**: (*a*) Yes, Sir.

(*b*) It was completed in April 1960.

*Sugar*

* 564 *Q.*—**Sri P. G. MANICKAM**: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் ராஜ்யத்தில் எத்தனை டன் சர்க்கரை உற்பத்தி செய்யப் படுகிறது ?

(ஆ) அயல் நாடுகளிலிருந்து எத்தனை டன் சர்க்கரை இறக்குமதி செய்யப்படுகின்றது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: (*a*) The production of sugar in the year 1959–60 was 73,873 tons.

(*b*) No import of sugar from abroad was made during the year 1959–60.

9th September 1960]

**SRI P. G. MANICKAM** : தற்போது நமது ராஜ்யத்திலே எத்தனை எக்கர் பரப்பில் கரும்பு சாகுபடி செய்யப்படுகிறது ? மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இன்னும் எவ்வளவு எக்கர் நிலத்தில் கரும்பு சாகுபடி செய்யப்படும் ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : எத்தனை எக்கர் என்பதைப் பற்றி என்னிடம் தகவல் இல்லை. மொத்தத்தில் 80,000 டன் உற்பத்தியாகிறது. நம்முடைய ராஜ்யத்தின் தேவை 1,25,000 டன் ஆக இருக்கிறது. குறைந்தது இன்னும் 10 லட்சம் டன் கரும்பு அதிகமாக உற்பத்தியாக வேண்டியிருக்கிறது, இந்த ராஜ்யத்தின் சுய தேவையைப் பூர்த்தி செய்துகொள்ள.

### *Radio-Isotopes*

* 565 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether steps have been taken to utilize "Radio-Isotopes" in Agriculture?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is proposed to set up a Radio-Isotope laboratory at the Agricultural College and Research Institute, Coimbatore, and the Indian Council of Agricultural Research has been approached for financial assistance.

SRI A. A. RASHEED : May I know, Sir, whether the Radio-Isotope has been in use in agriculture in our State, and if so, what are the results of such experiment?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir. This scheme will be taken up for the first time now. The cost of the scheme is 6·9 lakhs of rupees. The Indian Agricultural Research Institute has accepted to give assistance for the scheme. We will take it up.

### *Police Research Centre*

* 566 *Q*.—SRI A. R. SUBBIAH MUDALIAR (on behalf of SRI T. SAMPATH) : Will the Hon. the Minister for Home be pleased to state the nature of the work done in the Madras Police Research Centre?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Madras Police Research Centre undertakes the studies of crime relating to definite groups or class of people in select areas in order to find how far heredity, environment, lack of educational facilities, economic backwardness, etc., play a part in advancing criminal tendencies and their bearing on the actual incidence of crime. The Centre also undertakes an investigation into the *modus operandi* of criminals and the possibility of arresting crimes by removal of social disabilities. The relationship between industrialization with all its potentialities to protect crimes and its impact on crimes also receive the attention of the Centre.

SRI S. RANGANATHA MUDALIAR: May I know, Sir, whether the research is done by ordinary policemen or experts are appointed to do the research?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: It is not mere ordinary policemen that are entrusted with the research work. Persons with certain training alone are employed for this work.

*Artesian wells*

* 567 *Q.*—SRI K. R. VISWANATHAN: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of artesian and sub-artesian wells and the places where they are proposed to be sunk in Udayarpalayam taluk, Tiruchirappalli district;

(*b*) whether sanction has been accorded to the proposal; and

(*c*) if so, when the proposal will be implemented?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Fifty artesian wells will be sunk in the villages of Udayarpalayam taluk which lie within the 100 feet contour line and which are considered to be lying in the artesian basin. There are no proposals for sinking sub-artesian wells in Udayarpalayam taluk.

(*b*) Yes, Sir.

(*c*) The scheme will be implemented very soon.

*Inter-caste marriages*

568 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஜாதி ஹிந்து-ஹரிஜன ஜாதிகளிடை கலப்பு மணம் நடத்தி வைத்ததற்காக, 1959–60-இல் எத்தனை பேருக்குப பரிசுகள் வழங்கப்பட்டன?

(ஆ) என்னென்ன விதமான பரிசுகள் வழங்கப்பட்டன?

THE HON. SRI P. KAKKAN: (அ) & (ஆ) Information is being collected and will be placed on the table of the House as soon as possible.

*Land-mortgage Banks*

* 569 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் கைத் தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959–60-ல் இம்மாநிலத்திலிருந்த நில அடமான பாங்குகள் எத்தனை?

(ஆ) இந்த பாங்குகள் மூலம் கடன் வாங்குவதில் உள்ள சிரமங்கள் பற்றி அரசாங்கத்துக்குப் புகார் ஏதேனும் வந்திருக்கிறதா? அதன் விவரமென்ன?

(இ) அதைப் பரிகரிக்க அரசாங்கம் எடுத்துக்கொண்டிருக்கும் முயற்சி என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN: (அ) Eighty-five land mortgage banks.

(ஆ) & (இ) The answer[a] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix II on pages 591–592 infra.

9th September 1960]

**Sri A. VEDARATHNAM** : இந்த மாநில நில அடமான பாங்குகளின் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் கண்ட கோரிக்கைகளெல்லாம் நிவர்த்தி செய்யப்பட்டனவா ? கடன் வழங்குவதில் அளவு கடந்த கால தாமதம் ஆவதைத் தவிர்க்க ஒரு கால வரையறையை ஏற்படுத்தி இவ்வளவு காலத்திற்குள் விநியோகம் செய்யவேண்டும் என்று ஏற்பாடு செய்ய அரசாங்கம் முன் வருமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : கால தாமதம் ஆவதை ஏதோ " லாண்ட் மார்ட்கேஜ் பாங்க் " தவறுதல் என்று யூகித்துக் கொள்வது சரியல்ல. ஏனென்றால் நிலத்தை அடமானம் வைக்கிறவர்களுக்கு என்ன பாத்தியதை இருக்கிறது, எத்தகைய வில்லங்கங்கள் இருக்கின்றன என்பவைகளைப் பொறுத்து இருக்கிறது எவ்வளவு தூரம் கடன் கொடுப்பது என்பது. பரிசீலனை செய்து கடன் கொடுக்கும் காலததை அவ்வளவு சுலபமாகத் தவிர்க்க முடியாது. ஏதாவது தவறிவிட்டால் போதுமான ஜாமீன் இல்லாமல் போய் விடும். காலத்தை அதிகமாகச் செலவிடாமல் இருக்க ஒன்றிரண்டு யோசனைகள், அதாவது ரூபாய் 3,000 வரையில் ப்ரைமரி லாண்ட் மார்ட்கேஜ் பாங்க் ஸாங்ஷன் செய்து விடலாம் என்றும், இரண்டாவதாக, வக்கீல் அபிப்பிராயம் கேட்க இப்போது ஜில்லா தலைநகரில் இருக்கக்கூடிய சர்க்கார் வக்கீலுக்கு அனுப்பிக்கொண்டிருப்பது தேவையில்லை என்று கருதி அங்கேயே—பிரைமரி லாண்ட் மார்ட்கேஜ் பாங்கு இருக்கும் இடத்திலேயே—சர்க்கார் வக்கில் பரிசீலனை செய்யலாம் என்றும், சர்க்காருடைய ஆலோசனையில் இருக்கின்றது.

**Sri V. SUBBIAH** : ஜமீன் பிரதேசம் இன்னும் சர்வே ஆகாத காரணத்தினால் நில அடமான பாங்குகளிலிருந்து பல ஆண்டுகளாக கடன் கிடைக்காத நிலைமை இருப்பதால் உடனடியாக செட்டில்மெண்ட் ஆவதற்குள்ளேயே உதவி செய்ய ஏற்பாடு செய்யும் உத்தேசம் உண்டா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இதில் ஒரு சட்டச் சிக்கல் இருக்கிறது. ' அன்-ஸர்வேய்டு ஜமீன் லாண்ட்ஸ் ' இருக்கும் பகுதியில் நிலம் யாருக்குச் சொந்தம் என்று முடிவு ஆகவில்லை. இருந்தாலும் இப்போது நாம் அந்தப் பகுதிகளில் சில நில அடமான பாங்குகள் வைத்து எந்த அளவு உதவி செயயலாம் என்று சர்க்கார் ஆலோசனை செய்து கொண்டிருக்கிறது. சமீபத்தில் அந்த முறையில் ராமநாதபுரம் பகுதியில் ஒன்றிரண்டு பாங்குகள் வைத்திருப்பது கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரியும்.

Sri S. RANGANATHA MUDALIAR : Sir, in the statement placed before the House it is stated that the Government have since ordered that such lands should be valued with reference to the average market value of similar lands in the vicinity. But certain Tahsildars are so narrow in their interpretation of these rules, that when the value of the adjacent lands is high they say that it may be a fancy price and that they are not going to be guided by such price and thereby the loan applications are indefinitely delayed in their disposal. Is there not any remedy in such cases?

The Hon. Sri R. VENKATARAMAN : I am quite sure that such contingency would not have arisen because up till now the basis of the valuation has been the value of the land in pre-war years plus 40 per cent added to it and the loan granted is 50 per cent of that figure. Now we have changed the procedure that 50 per cent of the market value can be given. Orders have been passed only a few days back, not more than a month or so. Therefore no such cases would have arisen under the new rules.

[9th September 1960

### *Fowls*

* 570 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தேசீய அபிவிருத்தித் திட்டப் பிரதேசத்திலுள்ள எத்தனை கிராமங்களிலே கோழிகளின் தரத்தை உயர்த்த பரீட்சார்த்த திட்டங்கள் நடத்தப்பட்டன ?

(ஆ) இத் திட்டத்தின் மூலமாக ஏற்பட்ட பலாபலன்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Twenty-one Poultry Extension Centres have been set up under the scheme for the development of Poultry in Community Development/National Extension Service areas during the Second Five-Year Plan period. Each Centre covers an area, within a radius of 5 miles, comprising of one or more villages.

(*b*) From these centres 46,521 eggs were sold for hatching and 18,083 eggs for table. Twelve thousand, five-hundred and thirty-four eggs were used for hatching in these centres. Three-hundred and nineteen birds were distributed in the surrounding areas. These centres are serving as demonstration poultry farms for educating the villagers on the scientific methods of poultry husbandry.

SRI P. G. MANICKAM : ஸார், இவ்விதப் பரீட்சார்த்தத் திட்டங்களானது எல்லா ப்ளாக்குகளிலும் நடைபெறுவதில்லை. எல்லா ப்ளாக்குகளிலும் இப்படிப்பட்ட பரீட்சார்த்த திட்டங்களை நடத்தும்படி சர்க்கார் உத்தரவு பிறப்பிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தத் திட்டத்தை எல்லாப் பிராந்தியங்களிலும் நடத்த அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது.

SRI A. A. RASHEED : As there is shortage of fowls and eggs in our State, will the Government consider the desirability of stopping the export of these fowls to Ceylon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The hon. Member may put a separate question.

### *Subsidy (Wells)*

* 571 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959–60-ல் விவசாயிகளுக்கு மான்யமாகவும் கடனாகவும் கொடுக்கப்பட்ட 1,000 ரூபாயில் விவசாயக் கிணறு வெட்டும் வேலையைப் பூர்த்தி செய்யாமலிருப்பவர்கள் எத்தனை பேர்கள் ?

(ஆ) இக் கிணற்று வேலைகளைப் பூர்த்தி செய்ய முடியாதவர்களுள் எத்தனை பேர்கள் மறுபடியும் கடன் தொகை தேவையென்று சர்க்காருக்கு விண்ணப்பித்திருக்கிறார்கள் ?

(இ) இவர்களுள், எத்தனை பேர்களுக்கு மறுபடியும் கடனுதவி அளிக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The information cannot be had at present because an assessment of the actual number of well works incomplete under the 1958–59 and 1959–60 scheme will be made only by about the end of September 1960, while

9th September 1960]

that under the 1959–60 and 1960–61 scheme will be made by about January 1961, having regard to the last dates for completion of wells under the scheme.

(*b*) & (*c*) Do not arise.

SRI P. G. MANICKAM : சென்ற வருஷம் ஆயிரம் ரூபாய் கொடுக்கப் பட்டதில் இணற்று வேலை பூர்த்தியடையாததனால் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அவர்களிடமிருந்து அந்தத் தொகையை வசூலிக்க நடவடிக்கை எடுத்து வருவதாகத் தெரிகிறது. ஆனால், இந்த வருஷம் 1960–61-ல் இரண்டாயிரம் ரூபாய் கடனாகவும், 500 ரூபாய் மானியமாகவும் கொடுக்கப்படுகிறது. 1959–60-ல் கடன் கொடுத்து வேலை பூர்த்தியாகாமல் இருப்பவர்களிடமிருந்து அந்தத் தொகையைத் திரும்பப் பெறாமல் அந்த வேலை பூர்த்தியாகும் அளவுக்கு மேலும் கடன் தொகை அளிக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தந்த வருஷத் திட்டத்தின்படி அது அமுல் நடத்தப்படுகிறது. இதில் ஏதாவது கஷ்டம் இருப்பதாகத் தெரியப்படுத்தினால் அவ்வப்போது பரிசீலிக்கப்பட்டு வேண்டிய பரிகாரம் அளிக்கப்பட்டு வருகிறது.

### *Strike*

*572 *Q.*—SRI P. S. CHINNADURAI :
SRI A. VEDARATHNAM :
SRI N. K. PALANISAMI :
SRI S. PAKKIRISAMI PILLAI : } : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா :—

(அ) 1960, ஜூலை மாதம் 11-ம் தேதி நள்ளிரவு முதல் நடைபெற்ற மத்திய சர்க்கார் ஊழியர்களின் வேலை நிறுத்தத்தின்போது இந்த ராஜ்ய சர்க்காருக்கு பணச் செலவு ஏற்பட்டதா ?

(ஆ) அப்படியானால், எவ்வளவு தொகை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The expenditure incurred on the various measures taken by the State Government to protect Central Government properties and vital installations, and loyal workers and their families, and to maintain essential services, during the recent strike by the Central Government employees, is being reimbursed by the Government of India. Full details of the expenditure incurred have not yet been received, but the expenditure so far reported is about Rs. 3½ lakhs.

SRI A. VEDARATHNAM : ஸார், இந்த வேலை நிறுத்தத்தினால் சர்க்காருக்கு ஏற்பட்ட செலவை ஏழைகள் வரிப் பணத்திலிருந்து சரிக்கட்ட யோசித்திருக்கிறதா அல்லது இந்த வேலை நிறுத்தத்தை தூண்டிய கட்சிக்காரர்களிடமிருந்து வசூலிக்க உத்தேசித்திருக்கிறதா ? பல அரசியல் கட்சிக்காரர்களுக்கு வெளி நாடுகளிலிருந்து அதிகமான பணம் வருகிறது. அந்தப் பணத்திலிருந்து இது சரிக்கட்டப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கம் செலவு செய்வது, எதிர் பார்க்கப்பட்ட செலவு, எதிர்பாராத செலவு நியாயமான செலவு, அநியாயமான செலவு எல்லாம் ஏற்படும். எந்தச் செலவானாலும் மக்கள் வரிப் பணத்திலிருந்து தான் செலவழிக்கப்படுகிறது. ஆனால் அங்கத்தினர் சொல்வது போல் ஏதாவது பிரத்தியேகமாக வசூலிக்க வழி இருக்கிறது. இதிலே அந்த முறை கையாளப்படுவதற்கு இடம் இல்லை.

[9th September 1960

**SRI P. S. CHINNADURAI** : இந்த வேலை நிறுத்தத்தின் போது ஏராளமான போலீஸ்காரர்கள், கிராம மணியக்காரர்கள், கணக்குப் பிள்ளைகள், தலையாரிகள் எல்லாம் இதில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றனர். அதன் காரணமாக அரசாங்கமானது அவசியமில்லாத செலவு எவ்வளவாகி இருக்கிறது என்ற கணக்குக் கூடத் தெரியாமல் ஏராளமான பணத்தைச் செலவு செய்திருக்கிறது. இந்தப் பணத்தை மத்திய சர்க்காரிடமிருந்து கட்டாயமாகப் பெறுவதற்கு முயற்சி எடுக்கப்படுமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : அவசியமில்லாத செலவு செய்யப்பட்டது என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. எவ்வளவு செலவு செய்யப்பட்டிருந்த போதிலும் அவ்வளவும் மத்திய அரசாங்கத்திடம் இருந்து பெறப்படும் என்று முன்னமேயே தெரிவித்தேன்.

**SRI M. KALYANASUNDARAM** : ஸார், கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஏ. வேதரத்தினம் அவர்கள் சொன்னது போல் பொது மக்கள் வரிப் பணத்திலிருந்து செலவு பண்ணக்கூடாது. இந்த ஸ்ட்ரைக்கைத் தூண்டி விட்ட மத்திய அரசாங்க நிதியமைச்சரிடமிருந்து அந்தப் பணத்தை வசூலிக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுமா ?

DEPUTY SPEAKER : I am not going to allow that question. I disallow it.

**SRI T. L. SASIVARNA THEVAR** : இந்த வேலை நிறுத்தத்தை உடைப்பதற்காகப் பெரிய உத்தியோகஸ்தர்களிடம் அட்வான்ஸ் ஆக பணம் கொடுக்கப்பட்டிருந்தது. அந்த வகையில் செலவான பணத்தை மத்திய அரசாங்கத்திடமிருந்து நம்முடைய சர்க்கார் பெறுவதற்கு ஏற்பாடு செய்வார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : ஸ்ட்ரைக்கை உடைப்பது என்ற பேச்செல்லாம் எதிர்க் கட்சிக்காரர்களுடைய பேச்சு. நியாயமான வகையில் பொது மக்களின் நன்மையை ஒட்டியே ஸ்ட்ரைக்கைச் சமாளிக்க பணம் செலவு செய்யப்பட்டது. இந்தச் செலவும் இந்த அரசாங்கம் செலவு செய்யவில்லை. மத்திய அரசாங்கம் தான் இதற்குப் பொறுப்பு.

*Radio and Electric apparatus*

* 573 *Q.*—**SRI P. G. MANICKAM** : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) ரேடியோக்களுக்கும், எலெக்ட்ரானிக் சாதனங்களுக்கும் தேவைப்படும் உறுப்புகளை உற்பத்தி செய்யும் எந்தெந்த ஸ்தாபனங்களுக்கு சென்னை ராஜ்யத்தில் லைசென்ஸ் வழங்கப்பட்டிருக்கின்றன ?

(ஆ) 1960-ம் வருடத்தில் இவ்வித லைசென்ஸ் தேவை என்று எத்தனை ஸ்தாபனங்கள் விண்ணப்பித்தன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

**SRI P. G. MANICKAM** : ஸார், இவ்வித சாதனங்களை உற்பத்தி செய்ய விரும்புவோர் லைசென்ஸ் எடுப்பது என்றால் 1960-ம் வருஷம் ஜூலை மாதம் 31-ம் தேதிக்குள் விண்ணப்பித்துக் கொள்ள வேண்டுமென்று இந்திய சர்க்கார் வர்த்தக இலாகா தெரிவித்திருக்கிறது. இந்த அறிவிப்பிற்குப் பிறகு இந்திய சர்க்காருக்கோ அல்லது சென்னை ராஜ்ய சர்க்காருக்கோ சீனியர் எஞ்சினியர்களிடமிருந்து எத்தனை விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன ?

**THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் அவர்கள் "எஸன்ஷியாலிடி சர்டிபிகேட்" வாங்குவதையும், லைசென்ஸ் வாங்குவதையும் பற்றிச் சற்றுக் குழப்பம் செய்து கொண்டு விட்டார் என்று நினைக்கிறேன். இவற்றை வெளிநாடுகளிலிருந்து தருவிக்க "எஸன்ஷி

[a] Printed as Appendix III on pages 592-59, infra.

யாலிடி சர்டிபிகேட்'' வாங்க வேண்டும். அதற்கு இத்தனை காலத்திற்குள் அப்ளிகேஷன் போட வேண்டுமென்று இருக்கிறது. தொழில் நடத்துவதற்கு லைசென்ஸ் வாங்க அப்ளிகேஷன் எப்போது வேண்டுமானாலும் போடலாம்.

## *Map burning*

* 574 *Q.*—Sri A. A. RASHEED:
Sri D. S. AUTHIMOOLAM: } Will the Hon. the Minister for Home be pleased to state the number of persons convicted and fined as a result of burning the map of India on 5th June 1960?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: One hundred and fifty-nine persons have so far been convicted as a result of the "Map-Burning" agitation on 5th June 1960. Of these, 81 were sentenced to pay a fine, but refused to do so, and courted imprisonment.

Sri A. A. RASHEED: May I know among the persons convicted for map burning, how many are women? What is the number of persons still in prison?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: I am sorry, I do not have the information.

Sri K. VINAYAKAM: Did the act of map burning in any public place take place or were these people arrested on the mere suspicion or apprehension that they would commit this kind of offence?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: Certain people were arrested under section 151, Criminal Procedure Code, as a preventive step and they were released the next day. Others were prosecuted for overt action. Whether it was actual burning of the map or whether it was an actual map is the question.

## *Counterfeit notes*

*575 *Q.*— Sri S. M. ANNAMALAI: (on behalf of Sri P. U. SHANMUGAM): கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த ஐயன் திருமாளிகை என்னும் கிராமத்தில் கள்ள நோட்டு அச்சடிக்கப்பட்டதாக எவரேனும் கைது செய்யப்பட்டனரா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: Three persons were arrested in Iyenthirumaligai village.

Sri S. M. ANNAMALAI: அதையொட்டி வழக்குத் தொடர்ந்தாகி விட்டதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: It is under investigation.

*Sevamandir*

*576 Q.—**Sri A. VEDARATHNAM**: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 12-8-1960-ல் சட்ட சபையில் 412-ம் எண் கேள்விக்களித்த பதிலையொட்டி மேஜை மீது வைக்கப்பட்ட எட்டில் 10-வது அயிட்டத்தில் கண்ட சென்னை இண்டஸ்ட்ரியல் டிரெயினிங் சென்டர் சேவா மந்திரில் என்னென்ன தொழில் கல்வி போதிக்கப்பட்டு வருகின்றன ?

(ஆ) இதற்காக அரசாங்கம் புரிந்து வரும் உதவி என்ன ?

The Hon. Sri R. VENKATARAMAN : (a) Training in the following trades are imparted in the Industrial Training Centre, Stree Seva Mandir, Madras :—

(i) Bleaching, dyeing and printing.

(ii) Book Binding.

(iii) Cutting and Tailoring.

(iv) Embroidery and needle work.

(v) Hand weaving.

(vi) Knitting with hand and machine.

(b) The Principal has been authorised to draw a sum of Rs. 5 per mensem per trainee as training grant towards the cost of raw materials supplied for training, rent, rates and taxes, electric charges, etc. Wherever necessary, expenditure is sanctioned towards the purchase of additional equipment required for the development of the Centre.

Sri A. VEDARATHNAM : இந்த ஸ்த்ரீசேவா மந்திரில் எவ்வளவு பேர்களுக்குப் பயிற்சி கொடுக்கப்படுகிறது ? இந்தப் பயிற்சிக்குப் பிறகு ஏதேனும் பரீட்சை உண்டா ? பரீட்சையில் தேரியவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்படுகிறதா ?

The Hon. Sri R. VENKATARAMAN : இந்த மூன்று தகவல்களும் என்னிடம் இல்லை. தனியாகக் கேள்வி கேட்டால் தகவல் கொடுக்கிறேன்.

*Handicrafts*

*577. Q.—**Sri P. G. MANICKAM** : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 3-வது ஐந்தாண்டுத் திட்டத்திலே சென்னை ராஜ்யத்தில் என்னென்ன கைத்தொழில்கள் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்று "All India Handicrafts Board" க்கு தெரிவிக்கப்பட்டிருக்கின்றது ?

(ஆ) எந்தெந்த தொழில்களை ஆரம்பிப்பது பற்றி இப்போர்டு மூலம் ஆராய்ச்சி செய்யப்பட்டு வருகின்றது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (a) & (b) The schemes for the development of Handicrafts under the Third Five-Year Plan are under consideration and they have not yet been finalised. The All-India Handicrafts Board will examine the schemes only after the Plan has been finalised and the details of the schemes have been furnished to it.

9th September 1960]

*City roads*

* 578 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state the reasons for deferring the proposal for the payment of grant to the Corporation for the improvement of City roads from out of the profits of the Government Transport Department?

THE HON. SRI R. VENKATARAMAN : The proposal for the payment of grant to the Corporation for the improvement of city roads from out of the profits of the Government Transport Department was deferred for the following reason :—

There was already a separate proposal under the consideration of Government for sanctioning during the current year adequate financial assistance to the Corporation of Madras for the improvement and proper maintenance of certain important City roads. According to this decision of the Government, the Corporation has been sanctioned financial assistance to the extent of Rs. 30 lakhs on the basis of half loan and half grant towards improvement of main thoroughfares and major bus routes.

(Mr. Speaker in the Chair.)

SRI A. A. RASHEED : May I know the total profits of the Government Transport in the Madras State? Is the Hon. Minister aware that the City roads are still in a very bad state of repair? If so, will the Government consider the desirability of increasing the grant to the Corporation or undertake the repair work themselves by entrusting it to a separate department?

THE HON. SRI R. VENKATARAMAN : I would remind the hon. Member that the Madras Government Transport pays a sum of Rs. 28 lakhs by way of motor vehicles tax and this should come out of that.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, are the Government giving grants in respect of the National Highways of Poonamallee High Road and Mount Road?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I would request the hon. Member to address that question to my colleague in charge of that portfolio.

SRI K. VINAYAKAM : In spite of the loans and grants granted to the Corporation authorities for the maintenance of these roads, is the Hon. Minister aware of the fact that for the past two years, the roads have been left to their fate with the result that motorists are finding it very difficult to negotiate the roads? If so, may I know whether the Government propose to take any alternative steps apart from the Corporation authorities for the proper maintenance of these roads?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the question relates to the Government Transport giving some money. So, I am sorry I cannot answer the question put by the hon. Member.

[9th September 1960

SRI S. M. ANNAMALAI : சென்னை நகராண்மைக் கழகம் தங்களுக்கு எவ்வளவு தொகை ஒதுக்கவேண்டுமென்று கேட்டார்கள் என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் சொல்லமுடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : In fact I am not concerned with this. The question relates to the grant by the Government Transport for the maintenance of roads.

*Irrigation wells*

* 579 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் விவசாயத்துக்கான கிணறுகள் வெட்டுவதற்காக அரசாங்கத்தாரால் கடனுகவும், மான்யமாகவும், விவசாயிகளுக்குக் கொடுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

(ஆ) இதுவரையில் எத்தனை கிணறுகள் வெட்டப்பட்டன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Loan and subsidy are given to agriculturists for sinking wells under the New Well Subsidy Scheme which is in operation from 1958-59.. The total amount of loan disbursed under the scheme up to the end of March 1960, is Rs. 41.41 lakhs. Out of this, a sum of Rs. 3.32 lakhs has been given as subsidy up to 30th June 1960.

(*b*) One thousand three hundred and twenty-seven wells have been sunk up to the end of June 1960.

SRI P. G. MANICKAM : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இவ்வாறு விவசாயக் கிணறுகள் வெட்டுவதன் மூலமாக எத்தனை ஏக்கர்களைப் பாசனத்திற்குக் கொண்டுவர பண வசதி கிடைக்கலாம் என்று சர்க்காரால் கணக்கிடப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றித் தனியாகக் கேள்வி வேண்டும்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, may I know whether we are getting any subsidy from the Government of India?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir.

SRI P. S. CHINNADURAI : விவசாயிகளுக்கு மான்யமாகவும் கடனுகவும் கொடுத்து கிணறு வெட்டும்படி சர்க்கார் கோரினாலும் போதுமான அளவு மான்யமோ கடனோ கிடைக்காத காரணத்தால் விவசாயிகள் கிணறுகளைப் பாதியிலேயே வெட்டாமல் நிறுத்தவேண்டிய தொல்லை ஏற்படுகிறது. ஆகையால், சர்க்காரே தேவைப்பட்ட இடங்களில், சர்க்கார் செலவிலேயே, கிணறுகளை வெட்டி பாசன வசதி செய்துகொடுத்து, அதற்குத் தேவையான நீர் வரி போட்டு வசூலித்துக் கொள்ளத் தயாராக இருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒரு கிணறு இரண்டு மூன்று ஏக்கருக்குத்தான் பாசன வசதி அளிக்கிறது. தனி நபர்கள் நிலத்தை வைத்துக் கொண்டிருக்கும்போது அந்த நிலத்தில் சர்க்காரே கிணற்றை வெட்டித் தருவது என்பது சாத்தியம் இல்லை.

9th September 1960]

SRI A. A. RASHEED : May I know the total amount received from the Government of India as subsidy for digging these irrigation wells?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, according to the figure I have with me, under the New Well Subsidy Scheme for 1958-59 and 1959-60, the amount of subsidy adjusted till the end of 1960 is Rs. 3,31,750.

SRI S. M. ANNAMALAI : கிணறு மான்யத் திட்டம் இரண்டாவது ஸ்டேஜிலுள்ள சமுதாய நலத் திட்டப் பகுதிக்கு இல்லை என்பது உண்மையா ? அப்படிப்பட்ட பகுதிகளுக்கும் இந்தத் திட்டத்தை விஸ்தரிக்க சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. தனியாகக் கேள்வி கேட்டால் பதிலளிக்கலாம்.

SRI P. G. MANICKAM : இவ்விதமாக வெட்டப்படும் விவசாயக் கிணறுகள் சிலவற்றில் அதிக ஆழம் போகாமலேயே தண்ணீர் வந்து விடுகிறது. சில கிணறுகளை அதிக ஆழமாக வெட்ட வேண்டி யிருப்பதால், கொடுத்த பணத்திற்குள் வெட்ட முடியாமல் விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். இப்பொழுது சர்க்காரால் நியமிக்கப்பட்டிருக்கும் நீரூற்றைக் கண்டுபிடிக்கும் அறிஞர்கள் மூலமாக எந்த எந்த இடத்தில் கிணறு வெட்டினால் தண்ணீர் சீக்கிரம் வரக்கூடும் என்று பரீட்சித்துப் பார்க்கும்படி சர்க்கார் உத்தரவு பிறப்பிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கிணறுகளை விவசாயிகள் சொந்தச் செலவில் வெட்டுகிறார்கள். அதற்கு ஓரளவுதான் உதவி அளிப்பது என்பது சர்க்காரின் திட்டம். எந்த எந்தக் கிணற்றுக்கு எவ்வளவு செலவாகிறது என்று பார்த்து அதற்கு வேண்டிய உதவி அளிப்பது என்பது சாத்தியமல்ல.

*Banks*

*580 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சென்ட்ரல் அல்லது விவசாய பாங்குகளுக்கு நாமினேஷன் மூலம் டைரக்டர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்களா ?

(ஆ) அப்படியானால் நாமினேஷன் மூலம் யார் யார் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir.

So far as the District Co-operative Central Banks are concerned, Government have appointed the Deputy Registrars in charge of Credit and Marketing Schemes in the area concerned as their representatives on the Boards of Management. In addition the State Co-operative Bank also nominates one representative on the Board of Management of each of these Central Banks. As regards Agricultural Banks, the first set of Directors including the President, the Vice-President and the Treasurer are nominated by the Registrar of Co-operative Societies for a period of three years. In regard to the second and subsequent boards, a suitable non-official is being nominated to represent Government on the Board of Management of the Agricultural Bank, if Government had participated in the share capital structure of that bank. Besides, the District Co-operative Central Bank concerned also nominates a Director if it holds shares in the Agricultural Bank.

[9th September 1960

SRI P. G. MANICKAM : உத்தியோகப் பற்றில்லாத அங்கத்தினர்களை டைரக்டர்களாகத் தேர்ந்தெடுக்க வேண்டுமானால், அவர்களுக்கு என்ன யோக்கியதாம்சங்கள் இருக்கவேண்டும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : பொதுவாக, கூட்டுறவு இயக்கத்தில் நம்பிக்கையுள்ளவர்களாக, அதை வளர்க்கவேண்டுமென்று நினைக்கிறவர்களாகப் பார்த்து ரிஜிஸ்த்ரார் அவர்கள் "நாமினேட்" செய்கிறார்கள்.

SRI P. S. CHINNADURAI : விவசாய பாங்குகளுக்கு டைரக்டர்களை நியமனம் செய்வதைக் காட்டிலும், அதிலே பங்குதாரர்களாக இருக்கும் விவசாயிகளே அந்த பாங்குக்கு உரிய டைரக்டர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படியாக விட்டுவிடுவது சிறந்த ஜனநாயக முறை அல்லவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த முறை இப்பொழுது இல்லை என்று யார் சொன்னார்கள் என்று எனக்குப் புரியவில்லை. முதன் முதலில் பாங்குகளை ஆரம்பிக்கும்போது எல்லோருக்கும் தெரியாது. அதனால் சர்க்கார் ஆரம்பித்து ஷேர் காபிடல் முதலியவை எடுத்துக்கொள்ளும் காரணத்தால் ஒருசில வருஷங்களுக்கு முதல் நாமினேஷன் செய்கின்றோம். அதற்குப் பிறகு நாமினேஷன் செய்வதில்லை. அதில் சர்க்கார் பங்கெடுத்துக்கொள்ளும் காரணத்தால் அவர்களுக்கு ஒரு டைரக்டர் ஸ்தானம் உண்டு. அதை மாத்திரம் இரண்டாவது, மூன்றாவது முறையாக நடக்கும் போர்டுகளில் நாங்கள் நாமினேஷன் செய்கின்றோம்.

*Camphor*

*581 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1959–60-ல் சென்னை ராஜ்யத்திற்கு எவ்வளவு கர்ப்பூரம் இறக்குமதியாயிற்று ?

(ஆ) இன்னும் எவ்வளவு தேவை ?

(இ) சென்னை ராஜ்யத்தில் கர்ப்பூர உற்பத்தியை அதிகரிக்க என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) The Government of India have permitted the State Trading Corporation to import camphor and distribute it to the actual users on an All-India basis. During 1959 and 1960 a quantity of 70,654 (seventy thousand six hundred and fifty-four) lb. were distributed by the State Trading Corporation to the actual users in Madras State. Information is not available regarding the actual requirements of camphor for Madras State.

(*c*) Camphor is not produced in Madras State.

SRI S. NAGARAJA MONIGAR : கர்ப்பூரத்தின் தேவை நமது சென்னை ராஜ்யத்திலே வருஷத்திற்கு வருஷம் அதிகரித்து வருகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தேவையைப் பற்றி எங்களிடத்தில் தகவல் இல்லை.

SRI P. S. CHINNADURAI : நம்முடைய ராஜ்யத்தில் பொதுவாக கடவுள் நம்பிக்கை அதிகம். மற்ற ராஜ்யங்களைவிட சூடம் கொளுத்துவதும் இங்கே மிகவும் அதிகம். மக்களுடைய சௌகரியத்தை உத்தேசித்தும், இந்த ராஜ்யத்தின் பணம் இங்கேயே இருப்பதற்கும் அனுகூலமாக கர்ப்பூரம் தயாரிப்பதற்கான ஒரு தொழிற்சாலையை இங்கே ஏற்படுத்த ராஜ்ய சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கர்ப்பூரம் எப்படித் தயாரிப்பது என்பது கனம் அங்கத்தினருக்குத் தெரியுமோ தெரியாதோ. அதற்கு வேண்டிய சாதனங்கள் நம் ராஜ்யத்தில் இல்லை, வெகுவாக

9th September 1960]

வெளிநாட்டிலிருந்துதான் வந்துகொண்டிருக்கின்றன. இப்பொழுது பரீட்சார்த்தமாக சர்க்கார் இந்தக் கர்ப்பூரம் விளைவிக்கக் கூடிய "ப்ளான்ட்" பயிராவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள்.

**MR. SPEAKER :** கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் தம் கேள்விக்கு மீண்டும் இப்பொழுது பதிலளிக்கவேண்டுமென்று என்னிடம் கேட்டார். அதை ஏற்கனவே கனம் அங்கத்தினர் திரு. எஸ். எம். அண்ணாமலை அவர்கள் போட்டு அதற்குப் பதிலும் கொடுக்கப்பட்டு விட்டதால் அதை மறுபடியும் எடுத்துக்கொள்வதற்கில்லை என்று அவர்களுக்குத் தெரிவிக்கிறேன்.

Questions are over.

**[NOTE.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—PRIVILEGE MATTERS.

9-30 a.m.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM :** Mr. Speaker, Sir, I would like at the outset, to express to you the gratification and appreciation of the entire House at the very firm stand you have taken regarding the question of jurisdiction that could be exercised over you. Sir, it is indeed a matter of pride to this Honourable House that we have in you an ideal Speaker. Sir, you and this House are quite zealous in upholding the dignity and the supremacy of this House. May I say, that this House and you, Mr. Speaker, are equally zealous about safeguarding the dignity, integrity and independence of the judiciary? I may also claim that we in this House are even more zealous in safeguarding the dignity and independence of the judiciary than the 120 learned advocates who are reported to have filed Vakkalats for the writ petition against you. Sir, you took your stand on Article 212 of the Constitution Article 212 (1) says—

"The validity of any proceedings in the Legislature of a State shall not be called in question on the ground of any alleged irregularity of procedure."

Article 212 (2) also says—

"No officer or member of the Legislature of a State in whom powers are vested by or under this Constitution for regulating procedure or the conduct of business, or for maintaining order, in the Legislature shall be subject to the jurisdiction of any court in respect of the exercise by him of those powers."

Sir, not only are we interested in upholding the dignity of the House and the Judiciary but we are also vitally interested in safeguarding the sanctity of our Constitution and the House would remember that we had to pass an extraordinary piece of legislation in order to safeguard the sanctity of our Constitution. Sir, there is the other Article 211 which reads like this—

"No discussion shall take place in the Legislature of a State with respect to the conduct of any Judge of the Supreme Court or of a High Court in the discharge of his duties."

[Sri M. Bhaktavatsalam] [9th September 1960

Sir, I would like to submit that the word 'conduct' cannot be given a very wide meaning so as to include comments and references to judgment of courts. If such a wide interpretation is to be given, that would mean that this House will be completely shut out from taking notice of any observations of the court against a Minister or any officer of the Government. It will prevent this House from exercising its privilege, its right, to take notice and take such action as they deem it fit. It would prevent the House even from eliciting information on certain comments of the High Court that this House comes across. You are aware that we do see institutions outside, particularly journals have been commenting freely on the various judgments pronounced by the High Court. Therefore, it cannot be contended that this House cannot exercise even that much of right to make reference or to make comment about any observations made by the Honourable Judges of the Court. So, the word 'conduct' cannot mean reference to judgment or comments on certain observations in a judgment.

Then with regard to the point, whether the discussion would transgress what is enjoined in Article 211 with respect to the conduct of any Judge of the Supreme Court or High Court, it is your supreme authority that should decide about it. You, Mr. Speaker, will have to regulate the discussion and you have been doing it with such a high sense of decorum and satisfaction to the entire House. It is for you and you alone, to say whether any discussion in this House transgresses what is forbidden under Article 211 of the Constitution.

Then I would refer to Article 194 (2) of the Constitution. It says —

"No member of the Legislature of a State shall be liable to any proceedings in any Court in respect of anything said or any vote given by him in the Legislature or any committee thereof, and no person shall be so liable in respect of the publication by or under the authority of a House of such a Legislature of any report, paper, votes or proceedings."

You will notice, hon. Members will notice that this Article 194 (2) is absolute. Under Article 194 (1) there is a proviso which says—

"Subject to the provisions of this Constitution and to the rules and standing orders . . ."

But in Article 194 (2) there is not even that proviso and there is absolute prohibition. Sir, hon. Members of this House do enjoy absolute immunity from any proceedings that could be had outside the House. This is the position and there is no doubt about it so far as this House and so far as those who are outside the House are concerned. But I do submit that there is no harm and we need not be in a hurry about discussing various references that have been made in this House and which you have posted for to-day's discussion. I would submit that we may wait and see what the High Court has got to say. That does not mean—again I would repeat—that we have any doubt about the stand you have taken. But still, Sir, I would make a suggestion, if I may, about the discussion that is posted today regarding the various privilege

9th September 1960] [Sri M. Bhaktavatsalam]

motions that were given with reference to the *writ of mandamus* that was filed against you and also reference that was made by the hon. Member, Sri Lazar the other day which you have also posted for today might be postponed to some later date when the House will sit after it is adjourned either tomorrow or on the 12th instant.

SRI M. KALYANASUNDARAM : Sir, I have no objection to the postponement of the matter . . .

MR. SPEAKER : It was agreed that the Hon. Minister for Home should make a statement. If I now allow the hon. Member to speak, then I must allow others also to speak.

SRI M. KALYANASUNDARAM : Sir, I want to refer to another point.

MR. SPEAKER : I have no objection to the hon. Member raising his point after the House has given its decision to the request of the Hon. Minister for Home.

Now, my position is clear. I have stated my stand and I am at the disposal of the House. If the House agrees to the postponement of the matter, I would agree to it. I take it that the House is in favour of the postponement of the discussion to a later date.

SRI M. KALYANASUNDARAM : Sir, with regard to the matter raised by the hon. Member, Sri Lazar, the case asking him to appear before the court for contempt, if my information is correct, is posted to some date in October. The Assembly may be meeting again only during November or so and I do not know it. But now it will adjourn on the 12th instant, and meet again too late after the High Court has investigated the complaint against the hon. Member, Sri Lazar. So far as I am concerned, I have no sympathy for the matter raised by the hon. Member Sri S. Lazar.

MR. SPEAKER : The hon. Member is giving an opinion.

SRI M. KALYANASUNDARAM : As far as the Constitution is concerned, an hon. Member of this House cannot be proceeded against in respect of a speech made by him in this House. But the hon. Member Sri S. Lazar has to appear before the Court to answer a charge. The House must know what is to happen.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Regarding the point raised by the hon. Member Sri M. Kalyanasundaram, Government propose to ask the Advocate-General to take up the matter and give such aid as would be necessary to the hon. Member Sri S. Lazar.

MR. SPEAKER : As a matter of fact, I am unable to give an opinion immediately. The hon. Member Sri Kalyanasundaram has taken me by surprise. If the hon. Member has asked me in my Chamber I would have given him advice. Now the Hon. the Home Minister has made known Government's intention. I think now the hon. Member Sri Kalyanasundaram has nothing further to ask on this matter. The matter is closed.

## III.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS PUBLIC PREMISES (EVICTION OF UNAUTHORISED OCCUPANTS) BILL, 1960 [a] (L.A. BILL NO. 24 OF 1960).

* THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Public Premises (Eviction of Unauthorised Occupants) Bill, 1960 (L.A.. Bill No. 24 of 1960), be taken into consideration."

Unauthorised occupations in lands which are the property of Government are dealt with under the Madras Land Encroachment Act, 1905. This Act provides amongst others for levy of assessment and for the levy of penalty after notice, and empowers the Collector to summarily evict the encroachments and forfeit any crop or other product raised on such land. Before summarily evicting an encroacher, a notice under section 7 has to be served on the encroacher to show cause against proceedings under those sections. This procedure was devised in 1905 and was found adequate to check unauthorised occupation of Government lands in the circumstances then prevailing.

The conditions have now changed considerably. Due to many causes like congestion of population in the cities, towns and other industrial and commercial places, unauthorised occupation of the Government land is on the increase. In some cases, there are organized attempts to occupy Government lands suddenly and in large numbers overnight. The procedure laid down in the Land Encroachment Act is inadequate and wanting in speed to counteract such sudden and organised attempt to occupy and squat on Government lands both in the Municipaliities and Panchayats and in the City of Madras. At present, the occupation of Government lands comes under three categories, viz., (1) unobjectioinable, (2) unobjectionable for the present but may become objectionable in the future and (3) objectionable. The existing provisions of the Act are fairly adequate in dealing with the occupations coming under the categories (1) and (2). But in respect of objectionable cases of encroachment requiring immediate eviction, some measures to quicken the process of eviction is necessary.—Such unauthorised occupations create slums and are a source of danger to public health and sanitation. Immediate eviction of such occupations is necessary not only in the interest of public health but also to prevent the growth of further slums. The Bill introduced in this Assembly, on 16th August 1960 has therefore been prepared with the main object to provide for summary eviction and removal of encroachment on Government lands by construction of huts, bunks, etc., which spring up unauthorisedly and very quickly, and which are detrimental to public health and sanitation.

The Bill is a simple one and I request the House, Sir, to accept the motion.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Public Premises (Eviction of Unauthorised Occupants) Bill, 1960 (L.A. Bill No. 24 of 1960), be taken into consideration."

---

[a] Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 16th August 1960

9th September 1960]

SRI M. KALYANASUNDARAM: Sir, I move the following amendment:—

"That the Madras Public Premises (Eviction of Unauthorised Occupants) Bill, 1960 (L.A. Bill No. 24 of 1960), be referred to a Select Committee."

SRI K. SATTANATHA KARAYALAR: I second the amendment, Sir.

MR. SPEAKER: Amendment moved:—

"That the Madras Public Premises (Eviction of Unauthorised Occupants) Bill, 1960 (L.A. Bill No. 24 of 1960), be referred to a Select Committee."

May I know how long the House would require for general discussion and clause-by-clause consideration of this Bill?

SRI P. S. CHINNADURAI: About an hour.

MR. SPEAKER: All right. We shall now proceed. The hon. Member, Sri P. S. Chinnadurai may now speak.

SRI P. S. CHINNADURAI: கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது இந்த சபையின் முன்பாக சமர்ப்பித்திருக்கிற இந்த மசோதாவானது மிகவும் கொடுமையான ஒரு மசோதா என்று நான் சொல்ல விரும்புகிறேன். இப்படிப்பட்ட கொடுமையான மசோதாவுக்கு கனம் முதல் அமைச்சர் அவர்கள் எப்படி சம்மதம் தெரிவித்தார் என்பனத என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. சர்க்காருடைய நிலங்களில் சர்க்காருடைய உத்திரவு அன்னியில் ஆக்கிரமித்துக்கொண்டு வீடு கட்டிக்கொண்டோ அல்லது வேறு வகையில் பயன்படுத்திக்கொண்டோ இருந்தால் அவர்களை வெளியேற்றுவதற்கு ஏற்கெனவே ஒரு அதிகாரம் சர்க்காருக்கு இருக்கிறது. ரெவின்யூ இலாகா மூலமாக அதற்கு உரிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளலாம். அவ்வாறு ஆக்கிரமித்துக்கொண்டிருக்கிற அந்த இடமானது உண்மையிலேயே சர்க்காருக்கு தேவையற்றதாக இருந்தால் சர்க்கார் அதனை பல சந்தர்ப்பங்களில் யார் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்களுக்கே பட்டா செய்து கொடுத்திருக்கிறார்கள். இப்பொழுதும் கொடுத்துக் கொண்டுதான் வருகிறார்கள். சர்க்காருக்குத் தேவையான இடங்களாக இருந்தால் அதில் இருக்கக்கூடியவர்களை வெளியேற்றியும் வருகிறார்கள். இது வாடிக்கையாக நடந்து வருகிறது. இது நடைமுறையில் நடந்து கொண்டு தான் வருகிறது. அப்படி வெளியேற்றுவதை தீவிரமாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் இதுகொண்டு வரப்பட்டிருக்கிறது. இன்னும் சொல்லப்போனால் இப்பொழுது இருக்கிற அப்பீல் செய்வது போன்ற பல காரியங்களுக்கு இடம் கொடுக்காமல் ஏதோ சர்க்காருக்குத் தேவை—சர்க்கார் என்று சொன்னால் உடனே மந்திரி சபை என்று எடுத்துக் கொள்ளக் கூடாது, அந்தந்த இடங்களில் இருக்கக் கூடிய கணக்குப் பிள்ளைகள் மணியக்காரர்கள், ரிவின்யூ அதிகாரிகள், நகரங்களில் சர்க்காரின் கீழ் இருக்கிற உத்தியோகஸ்தர்களைத் தான் குறிப்பிடுகிறது—சர்க்கார் என்று சொன்னால் உடனே மந்திரி சபை என்று எடுத்துக்கொள்ளக் கூடாது—அவர்களுக்கு வேண்டும் என்று நினைத்தால் அந்த இடங்களைக் காலிசெய்ய வேண்டும் என்று டாம் டாம் செய்து அந்த இடத்தைக் காலி பண்ண வேண்டும், எப்படியாவது காலி பண்ணித்தான் ஆக வேண்டும் என்று சொல்லுகிறார்கள். எப்படியாவது அவர்களைக் காலி பண்ணச்சொல்லி நிர்ப்பந்தம் செய்கிறார்கள். அப்படி நிர்ப்பந்தம் செய்வதை அவசியமாக உபயோகப்படுத்துவதற்காகவே இந்தச் சட்டம் வழிவகை செய்கிறது. அது மட்டுமல்ல, இந்த சட்டத்தில் இன்னும் மிகப்பெரிய ஒரு குறைபாடு என்ன

என்றால் ஆக்கிரமித்த நிலத்திலிருந்து வெளியேற்றுவதற்கு சர்க்கார் முடிவு எடுத்துக்கொண்டிருக்கும்போது அவர்கள் வெளியேறினால் அவர்கள் எங்கே வெளியேறுவது என்பதைப்பற்றியும், அவர்களுக்கு ஏதாவது மாற்று வழிவகை செய்யப்பட்டிருக்கிறதா என்பதைப்பற்றியும் இந்தச் சட்டத்தில் ஒன்றையும் காணோம். எந்த வகையிலும் மாற்று ஏற்பாடு செய்யப்படவில்லை. சர்க்காருக்கு இடம் வேண்டுமென்றால் உடனே இடத்தை விட்டு விட வேண்டும். வீடு கட்டிக் கொண்டிருந்தாலும் குடிசை போட்டுக் கொண்டிருந்தாலும் சர்க்கார் வேண்டும் என்று சொன்னவுடன் அந்த இடத்தை விட்டு விட வேண்டும் என்று இருக்கிறது. அந்த அளவில் இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்டச் சட்டத்தைக் கொண்டுவருவதன் நோக்கம் நகரங்களில் இன்னும் மற்ற சிறிய பஞ்சாயத்து நகரசபைகளில் வாழக் கூடிய பெரும்பாலான குடிசை வாழ் மக்களை பாதிப்பதற்கே கொண்டு வரப்பட்டிருக்கிறது என்றுதான் நினைக்கவேண்டியதாக இருக்கிறது. நகரங்களில் மக்கள் ஏன் குடியேறுகிறார்கள்? பெரும்பாலான கிராமங்களிலிருந்து மக்கள் நகரங்களுக்கு பிழைக்க வருகிறார்கள். பல வகைகளில் பிழைப்பைத் தேடிக்கொள்ளலாம் என்று நகரங்களுக்கு வருகிறார்கள். அப்படி நகரங்களுக்கு வந்து வேலை தேடிக் கொண்டு சம்பாதிக்க முற்படுகிறார்கள். அப்பொழுது அவர்களால் வீட்டு வாடகை கொடுக்க முடியாமல் சர்க்கார் இடங்களில் குடிசைகளைக் கட்டிக்கொண்டு தங்களுடைய வாழ்க்கையை நடத்துகிறார்கள். இதை நம்முடைய சென்னை நகரத்தில் எங்கு பார்த்தாலும் பார்க்கலாம். ஏராளமாக அப்படி இருப்பதைக் காணலாம். அவர்களில் பெரும்பான்மையோர் கிராமப்புறங்களிலிருந்து வந்தவர்கள் தான். சர்க்கார் அவர்களுடைய கணக்கை எடுத்துப் பார்த்திருந்தால் அவர்களில் பெரும்பாலோர் கிராமங்களிலிருந்து வந்தவர்களாகத்தான் இருப்பார்கள். அவர்கள் நகரங்களில் வசிக்கக் கூடிய இடம் சுகாதாரமற்ற இடங்களாகத்தான் இருக்கிறது. அவர்களை வெளியேற்றுவதாக இருந்தால் அவர்களுக்கு ஏதாவது மாற்று ஏற்பாடு செய்து கொடுக்க வேண்டாமா, அப்படிச் செய்து கொடுத் திருக்கிறார்களா, அதைப் பற்றி சட்டத்தில் என்ன இருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன். இந்தச் சட்டத்தால் ஏழைகள் பாதிக்கப்படுவார்கள். இப்படிப்பட்ட சட்டம் கொண்டுவருவது முறையல்ல, சரியல்ல என்பதை நான் எடுத்துச்சொல்ல விரும்புகிறேன். அதனால் தான் நான் துவக்கத்தில் இது ஒரு கொடுமையான மசோதா என்று சொன்னேன். இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்து ஏன் இந்தக் கொடுமையைச் செய்ய வேண்டும்? இந்தச் சட்டத்தை கடுமையாக மந்திரிகளுக்கு அமுல் நடத்த மனம் இல்லாமல் போனாலும் அதை அமுல் நடத்தக்கூடிய உத்தியோகஸ்தர்கள் கொடுமையாகத்தான் அமுல் நடத்துவார்கள். அப்பொழுது பாதிக்கக் கூடிய நிலைமையில்தான் மக்கள் இருப்பார்கள். அவர்களில் பெரும்பாலானவர்கள் கிராமங்களிலிருந்து இங்கு பிழைப்புக்கு வந்தவர்களாகத்தான் இருப்பார்கள். அவர்கள்தான் இப்படிப்பட்ட இடங்களில் குடியேறியவர்களாக இருப்பார்கள் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

பொதுவாக, வீடு இல்லாத குறை அதிகம். ஓரளவுக்கு அதிகமான வசதி படைத்தவர்கள்கூட, வருமானம் உள்ளவர்கள்கூட, சொந்தமாக வீடு கட்டிக்கொள்ள முடியாத நிலைமையில் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டு சர்க்காரின் பல்வேறு திட்டங்கள் மூலமாக உதவியை நாடிக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட வேளையில் வருமானமே இல்லாதவர்கள், மிகக் குறைந்த வருமானம் உள்ள ஏழை, எளிய பாமர மக்கள் முனிசிபல் நகரங்களிளிலோ, பஞ்சாயத்துப் பகுதிகளிலோ சொந்தமாக நிலம் வாங்கி வீடு கட்டிக்கொள்வது என்பது சாத்தியமே இல்லை என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். ஆகையால் சர்க்கார் இந்த வீட்டுக் கஷ்டத்தைப் போக்குகிற வரையில், எல்லோருக்கும் இருக்க வீடு என்கிற நிலைமையை ஏற்படுத்துகிற வரையில் இப்படிப்பட்ட சட்டத்தைக் கொண்டு வருவதற்கு முயலக்கூடாது என்று நான் சொல்ல விரும்புகிறேன். சேரிகளை ஒழிப்பதற்கு முன்னால் ஏழை எளிய மக்களின் குடிசைகளைப் பிரித்து எறிவதற்கு முன்னால் அவர்களுக்கு எந்த இடத்திலே வீடு கட்டிக்கொடுத்

திருக்கிருேம் என்று சொல்லுங்கள். அப்புறம் இத்தகைய சட்டம் வந்தாலும் பரவாயில்லை. அவர்களுக்கு மாற்று இடமோ, மாற்று குடியிருப்பு வசதியோ செய்துகொடுக்காமல் இன்றையதினம் இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதானது மிகவும் மோசமானதாகும். அவர்கள் குடிசைகளைப்பிரித்து எறிந்துவிட்டால் அவர்கள் எங்கே குடியேறுவார்கள் ? சென்னை நகரத்தைப் பொறுத்தமட்டில் இடமும் இல்லை, வீடும் இல்லை. இந்த நிலைமையில் அமைச்சர் அவர்கள் எப்படி இந்த மசோதாவைக் கொண்டுவரத் துணிந்தார்கள் ? இன்னுென்று. ஏற்கனவே வீடு உள்ளவர்களுக்கு எப்படிக்கொடுப்பது என்ருல்—ராமநாதபுரத்தில் பிழைப்புக்கு வழியில்லாதவர்கள் இங்கே வந்திருப்பார்கள். அங்கே ஒரு குடிசை அவர்களுக்கு இருக்கிறது என்பதற்காக இங்கே வீடு இல்லையென்பதும் முறையாக இருக்காது. இனிமேல் வேண்டுமானுல் இதுமாதிரியாக ஆரம்பத்திலேயே குடிசைபோட அனுமதிக்கப்படமாட்டார்கள் என்ருலும் சரி, 6 மாத காலத்திற்கு முன்பிருந்து போடப்பட்ட குடிசைகள் பிரித்து எறியப்படும் என்ருல்—6 மாதம் முன்பாக போடப்பட்ட குடிசைகளையும் கூட ஆறு மாதத்திற்குப் பிறகுதான் போடப்பட்டது என்று பிரிக்கவும் அதிகாரிகள் தயங்கமாட்டார்கள்.

**THE HON. SRI R. VENKATARAMAN** : ஆறு மாதங்களுக்குள் போடப்பட்டவைகளுக்கும் இனிமேல் போடுவது பற்றியும் தான் இந்தச் சட்டமே தவிர பழைய குடிசைகளைப் பொறுத்த வரையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்ருல் லாண்டு என்க்ரோச்மெண்டு ஆக்ட்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம்.

**SRI P. S. CHINNADURAI** : இந்த மசோதா கொண்டுவரும்போது அமைச்சர் அவர்களுடைய நோக்கம் எதுவாக இருந்தாலும் அதன் விளைவுகள் கொடுமையானதாக இருக்கும். இன்றைக்கு ஏழைகளுக்கு வீடுகள் கட்டித் தந்துவிட்டு இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிருேம் என்ருல் ஒருகால் நாங்கள் எங்கள் ஆதரவை இதற்குத் தர முன்வரலாமே தவிர மெஜாரிட்டி பலத்தை வைத்துக்கொண்டு இதை நிறைவேற்றிக்கொள்கிருேம் என்ற நினைப்பில் இந்த மசோதாவை இன்றைய தினம் நிறைவேற்றிக்கொள்வதாக இருந்தால் நிறைவேற்றிக்கொள்ளுங்கள். சபையினுடைய ஏகமனதான ஆதரவை இந்த மசோதாவுக்கு நீங்கள் எதிர்பார்க்கக்கூடாது என்று சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**SRI S. LAZAR** : கனம் சபாநாயகர் அவர்களே, நமக்கு முன்னுல் இருக்கக்கூடிய மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பவேண்டிய தேவை இருக்காது என்பது என்னுடைய தாழ்மையான கருத்து. இந்த மசோதாவில் குறிப்பிட்டிருக்கிறபடி இப்போது இருக்கக்கூடிய முக்கியமான பிரச்னை பொதுவாக அரசாங்கத்திற்குச் சொந்தமான நிலமாக இருந்தாலும் சரி, அல்லது ஸ்தல ஸ்தாபனத்திற்குச் சொந்தமான நிலமாக இருந்தாலும் சரி, அல்லது மசோதாவில் குறிப்பிட்டிருக்கிறபடி ஸிடி இம்ப்ரூவ்மெண்டு போர்டிடத்தில் ஒப்படைக்கப்பட்ட இடங்களாக இருந்தாலும் சரி, இந்த இடங்களில் அடிக்கடி—யார் வேண்டுமானுலும் குடிசை போட்டுக்கொண்டு விடுவது, இது என்ன அரசாங்கத்தின் சொத்து தானே என்று நினைத்துச் செய்கிற காரியத்திஞல் தான் பொதுவேலை தாமதப் படுகிறது என்பது கண்கூடாகக் காண முடிகிறது. இதைத் தடுக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு அரசாங்கம் இந்த மசோதாவைக்கொண்டு வருகிற போது இதில் உள்ள இரண்டு மூன்று முக்கியமான அம்சங்களைக் கருத்தில் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

குறிப்பாக நாம் கொண்டு வந்திருக்கிற மசோதாவின் முக்கியமான அம்சம் ஒருவர் ஆக்ரமித்த பிறகு எப்படி அவரை அதைவிட்டு வெளியேற்றுவது என்பதற்குத் தீர்வு காண்பதாக இருக்கிறதே தவிர ஆக்கிரமிக்காமல் தடுப்பது எப்படி, அல்லது ஏற்கெனவே ஆக்ரமித்துக்கொண்டவர்களை வெளியேற்றுகிறபோது அவர்களுக்கு எப்படி நிவாரணம் அளிப்பது என்கிற பரிகாரம் இதில் இல்லை என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

[Sri S. Lazar] [9th September 1960

ஏற்கனவே இருக்கிற என்க்ரோச்மெண்டு ஆக்ட் படி நடவடிக்கை எடுப்ப தென்றால் மிகவும் காலதாமதமாகிறது. ஆகவே இன்னும் கொஞ்சம் துரிதமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதற்காக இந்த மசோதா கொண்டுவரப்படுகிறது என்று இதிலே சொல்லப்படுகிறது. அபபடி துரிதமாக நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று சொல்கிறபோது இந்த ஒரு முறையைக் கையாண்டால் மட்டும் நமது பிரச்னை தீராது. காரணம் இப்போது இருக்கக்கூடிய சட்டங்களிலே ஒருவன் ஆக்கிரமித்த பிறகு நடவடிக்கை எடுக்க வாய்ப்பு இருக்கிறதே தவிர ஆக்கிரமிப்பு எடுக்காமல் தடுப்பதற்கு—தனி மனிதனுடைய நிலத்தை ஆக்கிரமிக்க முயல்கிறவர்களைத் தடுக்க வழியிருப்பது போல—பொது சொத்துக்களை ஆக்கிரமிக்க முயற்சிப்பவர்கள் மீது நடவடிக்கை எடுக்க வசதி கிடையாது. ஆனால் இது மிக மிக அவசியமான அம்சமாகும். யாராக இருந்தாலும் பொது இடத்தை ஆக்கிரமித்துக்கொள்ள இடம் கொடுக்கக்கூடாது. இதன்பேரிலும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றால் அதிகாரிகளுக்கு வசதி உள்ள வகையில் வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும்.

அதோடு கூட மற்றொரு பிரச்னை, ஏற்கனவே சொன்னதுபோல பல பல ஆண்டுகளாக ஸ்தல ஸ்தாபன இடங்களாக இருந்தாலும் சரி, அரசாங்கத்தாருக்குச் சொந்தமான நிலமாக இருந்தாலும் சரி வீடுகளைக் கட்டிக்கொண்டோ, சாகுபடி செய்துகொண்டோ தங்களது சொந்த அனுபவத்தில் வைத்துக் கொண்டிருப்பவர்கள் இருக்கிறார்கள். அப்படிப் பல ஆண்டுகளாக அநுபவித்துக் கொண்டு வருபவர்களின் மீது திடீரென்று என்க்ரோச்மெண்டு ஆக்டின் கீழ் பல நடவடிக்கை எடுக்கப்படுகிறது. அது போல் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டவர்கள் இன்று மிகவும் கஷ்டப் படுகிறார்கள். இம்மாதிரியாக இவர்கள் மீது நடவடிக்கை எடுத்துக்கொள் வதற்குக் காரணம் அந்தப் பொது நிலங்கள் பொது உபயோகத்திற்குத் தேவைப்படுகிறது என்கிற காரணம் அல்ல. ஆங்காங்கு இருக்கக்கூடிய தாசில்தார், டெபுடி தாசீல்தார் அல்லது மற்ற கிராம கணக்குப் பிள்ளை போன்ற அதிகாரிகள் முதற்கொண்டு தங்களுக்கு அந்த இடத்தைச் சொந்தமாக்கிக்கொள்ள நினைப்பதன் காரணத்தினாலோ, அல்லது அதை அநுபவிப்பவர்களின் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்ற காரணத்தினாலோ இந்த மாதிரியாக எல்லா விதமான ஏற்பாடும் செய்யப் படுகிறது. இதனால் பல ஏழைகள்கஷ்பாதிக்கப்படுகிறார்கள். இன்னும் கிராமப்புறங்களில் தான் இந்தக் கீடம் அதிகமாக இருக்கிறது. இதைப் பற்றிக்கூட அரசாங்கத்திற்கு ஒரு தீர்மானம் அனுப்பியிருக்கிறேன். பத்து ஆண்டு காலத்திற்குமேல் சொந்த அநுபவத்தில் யாராவது பொது நிலங்களை வைத்துக்கொண்டிருந்தால் அரசாங்கத்திற்குத் தேவைப்படுகிறபோது எடுத்துக்கொள்வோம் என்கிற கண்டிஷன்படி அதை அவர்களுக்கே சாசனம் செய்துகொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அதற்கான சட்டத்தைக் கொண்டுவரவேண்டும். இந்த மசோதாவைப் பொறுத்த வரையில் இரண்டொரு கருத்தைச்சொல்கிறேன்.

10-00 a.m. முதலாவது, யாராவது ஒருவர் பொதுவான இடத்தை ஆக்கிரமிப்பாரானால் அவரை வெளியேற்றுவதற்கு அதற்கான அதிகாரியையும் நியமிப்பதென்றும், அந்த அதிகாரி உத்தரவு போடுவாரானால் அந்த உத்தரவின்படி, கட்டிடங்களாக இருந்தால் 10 நாட்களிலும், மற்ற இடங்களாக இருந்தால் மூன்று நாட்களிலும், காலி செய்ய வேண்டுமென்று இந்த மசோதாவிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இன்னும் கீழே குறிப்பிடப்பட்டிருப்பது என்னவென்றால்—அதற்கான உததரவு சம்பந்தப்பட்டவருக்கு அனுப்பவேண்டுமென்ற நிலைமையிலே இங்கு இல்லை—அதற்கான உத்தரவை அதிகாரி எழுத்து மூலமாக ஏற்படுத்தவேண்டுமென்று சொல்லி, அப்படி ஏற்படுத்தக்கூடிய உத்தரவை கிராமத்திலே அல்லது சம்பந்தப்பட்ட இடத்திலே "பை ப்ரொக்லமேஷன்" அறிவித்து விடுவார்களானால் அதுவே "shall be deemed to have been duly served on all persons concerned" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த நிலைமை இருக்குமானால், 10 நாட்களிலோ அல்லது மூன்று நாட்களிலோ அதற்கான பரிகாரத்தைக் தேடுவதற்கு ஒரு குறிப்பிட்ட மனிதர், பாதகமான

9th September 1960] [Sri S. Lazar]

ஒரு முடிவு அதிகாரி எடுத்துக் கொண்டிருக்கிறார் என்று நினைக்கும்போது அதற்குத் தீர்வு காணவேண்டுமென்றால் 10 நாட்களிலோ அல்லது மூன்று நாட்களிலோ தேட முடியாது. ஒரு உத்திரவுக்கு நகல் வேண்டுமென்றாலும்கூட அது கிடைப்பதற்குக் குறைந்தது 10 அல்லது 12 நாட்கள் ஆகிறது. அவ்வளவு காலதாமதம் ஏற்படும்போது, எப்பொழுது பாதிக்கப்பட்ட மனிதர் அதற்கான உத்திரவினுடைய நகலை வாங்குவது? இந்த மசோதாவில் குறிப்பிட்டிருக்கிறபடி சென்னையிலுள்ள போர்ட் ஆப் ரெவின்யூ ஆபிசுக்கு எப்பொழுது வந்து அப்பீல் மனு தாக்கல் செய்வது, அதற்குப் பிறகு எப்பொழுது ஸ்டே வாங்குவது என்று பார்க்கும்போது, 10 நாட்கள் அல்லது மூன்று நாட்கள் என்று சொல்லும் காலம் போதாது. நிச்சயமாக 30 நாட்கள் என்றாவது ஏற்படுத்தினால் கனம் அங்கத்தினர் ஸ்ரீ சின்னதுரை அவர்கள் எதிர்பார்க்கும் அளவிற்குத் தொந்திரவு ஏற்படாமல் இருக்கும், ஏற்பட்டிருக்கும் கொஞ்சநஞ்சத் தொந்திரவைக்கூட நாம் அகற்றிவிட முடியும். இதற்கான உத்திரவை பாதிக்கப்பட்ட நபர்களுக்கு சர்வ் செய்ய வேண்டுமென்று இருக்கவேண்டுமே தவிர, கிராமத்திலே ப்ரொக்லமேஷன் செய்துவிட்டால் அதுவே போதும் என்ற நிலைமை ஏற்பட்டால் ஆங்காங்கு இருக்கும் சாதாரண ஜனங்களை மிகவும் பாதிக்கும். சென்னை நகரில் உள்ளவர்களுக்கு மட்டுமல்ல, இந்தச் சட்டம் மாகாணத்திலுள்ள எல்லா இடங்களுக்கும் அமுல் நடத்தபடும் என்று குறிப்பிட்டிருப்பதால் அந்த உத்திரவை சம்பந்தப்பட்டவர்களுக்கு சர்வ் செய்ய வேண்டுமென்று குறிப்பிடவேண்டிய அவசியம் இருக்கிறது.

இதற்கான அப்பீல் போர்ட் ஆப் ரெவின்யூக்கு வந்து தாக்கல் செய்யப்பட வேண்டுமென்று குறிப்பிட்டிருப்பது உள்ளபடியே நடைமுறைக்கு மிக மிக கஷ்டம். நான் ஏற்கெனவே பல சந்தர்ப்பத்தில் எடுத்துச் சொல்லியிருக்கிறேன். அப்பீலுக்கான அதிக அதிகாரத்தை சென்னையில் வைத்துக் கொள்ளுகிறீர்கள். போர்ட் ஆப் ரெவின்யூக்கு இருக்கிறது. இங்குள்ள உயர்நீதி மன்றத்திற்கு அனுப்பப்படுகிறது. இதனால் சாதாரணக்கிராமத்தில் இருக்கும் ஒருவன் அப்பீல் செய்வதென்றால், அதற்கென்று சென்னை நகரம் வரவேண்டி இருக்கிறது, என்றால் நிச்சயமாக அப்பீல் அனுகூலம் அவர்களுக்கு நடைமுறையிலே உபயோகப்படாது. ஒருவேளை நல்ல வசதி உள்ளவர்களுக்கு உபயோகப்படுமே தவிர சாதாரண ஏழைகளுக்கு உபயோகப்படாது, பெருமளவு அவர்களுக்குப் பாதகம் ஏற்படும் என்பதை மீண்டும் நான் வற்புறுத்திச் சொல்லுகிறேன்.

ஏற்கெனவே ஒரு சில சட்டங்களில் இப்படிச் செய்து விட்டோம், ஆகையால் மாற்றுவதற்கு இடமில்லை என்று அடிக்கடி சொல்லப்படுகிறது. சாதாரண ஏழை விவசாயிகளும் கூட ரிவிஷன் மனு போடுவதற்கு ஹைகோர்ட்டுக்கு வரவேண்டுமென்று இப்பொழுது இருக்கும் சட்டத்திலே இருக்கிறது. ஒரு சிறிய இடத்தைவிட்டு அகற்றப்பட வேண்டுமென்று அப்பீல் செய்வதற்குக் கூட சென்னை நகருக்கு வரவேண்டுமென்றால் நிச்சயமாக அவர்களுக்கு அனுகூலம் செய்ததாகவே இருக்காது, பாதகம் செய்வதாக இருக்கும். அப்பீல் முறையை வகுத்துக்கொடுத்ததாக இருக்குமே தவிர நடைமுறையில் எந்தவகையிலும் பிரயோஜனப்படாது என்பதை வலியுறுத்திக் கூறுகிறேன்.

ஆனால் அப்பீல் அதிகாரத்தை மற்ற ரெவின்யூ சம்பந்தப்பட்ட காரியங்களிலே எப்படி ஆங்காங்கு இருக்கும் மாவட்ட கலெக்டர்களுக்கு—இப்பொழுது இருக்கும் முறைப்படி மாவட்ட ரெவின்யூ அதிகாரிகளுக்கு—கொடுத்திருக்கிறோமோ அதுபோன்று அப்பீல் அதிகாரத்தை மாவட்டத்திலுள்ள ரெவின்யூ அதிகாரிக்குக் கொடுத்தால் ஜனங்களுக்குத் தொல்லை கொடுக்கும் நிலைமையை உண்டு பண்ணாது என்பதை நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அதே பிரிவில் அப்பீல் செய்வதற்கு அதிகாரம் இருக்கிறதே தவிர அதன் மீது ஸ்டே கொடுப்பதற்கு, உத்திரவை நிறுத்தி வைப்பதற்கு,—**"unless the Board of Revenue is satisfied that the appellant is entitled to the possession of the public premises".** என்று குறிப்பிட்டிருப்பது, ஒரு கையால் கொடுத்ததை மற்றொரு கையால் எடுத்து விடுவது என்று

ஏற்படுகிறது. சாதாரணமாக எந்த ஒரு மனிதனுக்கும் அப்பீல் செய்ய வேண்டுமென்ற நிலைமை ஏற்படுகிறபோது எந்தெந்த சந்தர்ப்பங்களில் ஸ்டே கொடுக்க முடியும் என்ற அதிகாரம் ஏற்கெனவே சாதாரண முறைப்படி சிவில் ப்ரொசீஜர் கோடின்படி வழங்கப்பட்டிருக்கிறது. தனிப்பட்ட முறையில் செய்தாலொழிய நிச்சயமாக ஸ்டே கிடைக்க அனுகூலம் ஏற்படாது. நடைமுறையில் பல சிக்கல்கள் ஏற்படும். ஸ்டேக்கு அவசியம் ஏற்பட்டால் தனிப்பட்ட கேஸினுடைய **merit and de-merit**-க்குத் தக்கவாறு ஸ்டே கொடுக்கலாம் என்ற நிலைமை இருக்க வேண்டுமே தவிர அதிலே வேறொரு நிபந்தனையைப் புகுத்துவது நடைமுறையில் பல சிக்கல்களை உண்டு பண்ணும் என்ற கருத்தைச் சொல்ல விரும்புகிறேன். இதுபோன்ற ஒரு நிலைமை ஏற்பட்டு பாதிக்கப்பட்ட ஒருவன் அப்பீலில் தோற்று அதற்குப் பிறகு சிவில் கோர்ட்டுக்குச் செல்லவேண்டிய நிலைமை ஏற்பட்டு தாவா செய்துகொண்டால், ஸ்டே கொடுக்க முடியாது என்று இரண்டாவது பிரிவில் போட்டிருக்கிறோம். இதிலேகூட நான் சொல்ல விரும்புகிறேன், ஒரு பொதுவான கட்டிடம் கட்டி அதை எடுத்து விடுவோம் என்ற முறையிலே உத்திரவு போட்டு எடுத்துவிட்டால் அவர் சிவில் கோர்ட்டுக்குப் போய் அவனுக்குப் பரிகாரம் ஏற்படுகிறது என்ற நிலைமை இருந்தாலும் அவனுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை ஈடு செய்ய முடியாது. அரசாங்கமோ அதற்குச் சம்பந்தப்பட்ட அதிகாரியோ அந்தக் கட்டிடத்தை ஏற்கெனவே இந்த மசோதாவில் இருக்கிற முறைப்படி தகர்த்து இடித்து விடுவார்களானால் அதற்குப் பிறகு சிவில் கோர்ட்டுக்குச் சென்று சாதகம் ஏற்படும்போது கட்டிடத்தை எப்படித் திருப்பித் தரமுடியும்? இந்த நிலைமையைப் பரிசீலனை செய்து அதை மாற்றி அமைக்க வேண்டிய அவசியம் இருக்கிறது. அப்படி மாற்றி அமைத்தால் நடைமுறையில் பல சிக்கல்கள் இருக்கிறது. ஏற்கெனவே சொன்னதுபோல ஆக்கிரமிப்பாளர்களைத் தடுப்பதற்கு வகை செய்யும் இதே சமயத்தில் ஏற்கெனவே பல ஆண்டுகளாக, குறைந்தது 10 ஆண்டுகளுக்கு மேலாக ஒருவனிடம் ஒரு சொத்து இருக்குமானால் அவனுக்கே அதைச் சொந்தமாக்கவேண்டு மென்ற நிலைமையையும் இந்த மசோதாவில் சேர்த்துக்கொண்டு வந்தால், நடைமுறையில் பல சௌகரியங்கள் கிடைக்கும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri M. KALYANASUNDARAM**: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவுக்கு என்னுடைய கட்சியின் சார்பில் ஆதரவு கொடுக்காமல் இருப்பதற்கு வருந்துகிறேன். மசோதாவின் முகவுரையில் குறிப்பிட்டிருக்கும் நோக்கங்கள் என்னவோ ரொம்ப நியாயமான நோக்கங்களாகத் தோன்றலாம். ஆனால் இந்த மசோதா நிறைவேற்றப்பட்டால் அதனுடைய விளைவுகள் என்னவாகும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இந்த மசோதாவில் "அன் ஆதரைஸ்ட் ஆகுபேஷன்" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. "பிரிமிஸஸ்" என்றால் என்ன என்பதற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் இரண்டு விளக்கங்களையும் சேர்த்துப் பார்க்கும்போது ஏதோ சர்க்கார் புறம்போக்கு நிலங்களிலோ அல்லது பொது காலி இடங்களிலோ குடிசை போட்டுக்கொண்ட ஆக்கிரமிப்பைத் தடுப்பதற்காக மட்டும் ஏற்பட்ட சட்டம் மாதிரித் தோன்றலாம். ஆனால் அப்படி அல்ல. மற்ற சட்டங்களிலே கொண்டுவரப்பட்டிருக்கும் பாதுகாப்பைக்கூட அபகரிக்கக்கூடிய அபாயம் இதில் இருக்கிறதென்பதை கனம் அமைச்சர் அவர்கள் இதுவரையிலும் சிந்திக்காமல் இருந்தால் அதை அவர்களுடைய கவனத்திறகுக் கொண்டு வர விரும்புகிறேன். "பிரமிஸஸ்" என்பதற்கு வியாக்கியானம் எப்படிச் செய்திருக்கிறார்கள் என்றால் "**any premises belonging to, or vested in the City Improvement Board** என்று சொல்லப்பட்டிருக்கிறது. சிடி இம்ப்ரூவ்மெண்டுக்குச் சொந்தமாக இருக்கும் காலி நிலங்களைக் குடிசைகள், கட்டிடங்கள் அவற்றையெல்லாம் அகற்றலாம் என்று வந்துவிடும். குறிப்பாகச் சென்னை நகரத்தில்தான் சிடி இம்ப்ரூவ்மெண்ட் டிரஸ்ட் இருக்கிறது. சிடி டெனன்ட் ப்ரொடக்ஷன் ஆக்ட் பாதுகாப்பில் இருக்கிறது. அதன் மூலம் கொடுக்கப்படும் பாது

9th September 1960] [Sri M. Kalyanasundaram]

காப்பை அபகரிப்பதற்காக சிடி இம்ப்ரூவ்மெண்ட் டிரஸ்ட்டுக்கு அந்த நிலத்தை விட்டு விடுவார்களானால், சி.ஐ.டிக்குச் சொந்தம் என்ற காரணத்தைக் காட்டி 10 தினங்களுக்குள் கட்டிடத்தைக் காலி செய்வதற்கு நடவடிக்கையை வெகு துரிதமாக எடுக்க முடியும். அப்படி எடுக்கும்போது வேறு சட்டங்களில் கொடுக்கப்பட்டிருக்கும் பாதுகாப்புகளை அபகரிக்காமல் இங்கே குறிப்பிட்டிருக்கிறார்களா, அதற்குப் ப்ரொவிஷன் இருக்கிறதா என்று சிந்திக்கக்கூட இல்லை.

அப்படி எடுக்கும்போது வேறு சட்டங்களில் கொடுக்கப்பட்டிருக்கும் பாதுகாப்புகளை அபகரிக்காமல் எங்கேயாவது கொடுக்கப்பட்டிருக்கிறதா ? அதற்குப் ப்ரொவிஷன் இருக்கிறதா ? நஷ்டயீட்டிற்கு பாதுகாப்பு ஏதாவது இருக்கிறதா ? ஸிட்டி டெனன்ட்ஸ் ப்ரொட்டக்ஷன் ஆக்ட்படி ஒரு லாண்ட்லார்ட் அவர் கீழுள்ள டெனன்டை வெளியேற்ற வேண்டுமென்று சொன்னால் அந்தக் கட்டிடத்திற்கான நஷ்ட ஈடு கொடுக்கப்பட வேண்டும், டெனன்ட் ஒத்துக்கொண்டால். அப்படி டெனன்ட் வெளியேற சம்மதிக்காவிட்டால் கிரயம் செய்யப்பட வேண்டும். ஸிட்டி இம்ப்ரூவ்மெண்ட் ட்ரஸ்ட்க்கு விற்று விட்டால் அந்தப் பாதுகாப்பு கிடைக்காது. இந்தப் பகுதிப்படி அது பறிக்கப்படும் என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். ஆக்கிரமத்திருக்கக்கூடிய பகுதிகளில் இந்தச் சட்டம் அமுலுக்கு வருவதற்கு முன்னால் ஆக்கிரமித்தவர்களைக்கூட காலி செய்வதற்குள்ள அதிகாரம் எடுத்துக் கொள்ளப்படுகிறது. இந்தச் சட்டம் வந்த பிறகு ஏற்படும் ஆக்கிரமிப்புகள் மட்டுமல்ல, இந்தச் சட்டம் அமுலுக்கு வருவதற்கு முன் ஆறு மாத காலம் வரை போட்டிருக்கக்கூடிய ஆக்கிரமிப்புகள் எல்லாம் அகற்றப்படுமென்று இருக்கிறது. ஆக்கிரமிப்புகளை அகற்றுவதற்குச் சாதாரண சட்டங்கள் இருக்கின்றன. அவைகள் படி போதுமான அதிகாரம் அதிகாரிகளுக்கு இருக்கிறது. அந்த அதிகாரத்தைச் சரியாக உபயோகப்படுத்தி பொது உபயோகத்திற்குத் தேவையான நிலத்தை எடுப்பதற்கு வசதிகள் இருக்கின்றன. இதற்கு பிரத்தியேகமான சட்டம் கொண்டு வரவேண்டியதில்லை, சேரிகள் ஏற்பட்டு சுகாதாரம் பாதிக்கப்படுவதைத் தடுப்பதற்குச். சேரிகள் ஏற்படுவதற்குள்ள காரணம் என்ன ? இவ்வளவு கேவலமான, சுகாதாரமற்ற இடங்களில் ஜனங்கள் போய்க் குடியிருக்க வேண்டியதின் அவசியமென்ன ? இது ஒரு முக்கியமான சமுதாயப் பிரச்னை. ஆக, அவர்கள் குடியிருக்க வசதியான வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டியது முக்கியம். குடியிருக்க வீடு கிடைக்காத காரணத்தினால் தான் ஏழை, எளிய மக்கள், குறிப்பாக ஹரிஜன மக்கள் எங்கு காலி இடம் கிடைத்தாலும் சரி அதில் குடிசை போட்டுக் கொண்டு அங்கேயே சாப்பாடு, அங்கேயே சமையல், அங்கேயே பிரசவம், அங்கேயே மரணம் எல்லாம் நடந்து கொண்டிருக்கிறது. இப்படி ஒரு வாழ்க்கை நடத்த அவர்களுக்கு உற்சாகமா, என்ன ? சர்க்காரை எதிர்க்க வேண்டுமென்று அவர்கள் குடிசை போட்டுக்கொண்டு வாழ்கிறார்கள் ? இதையெல்லாம் அமைச்சர் அவர்கள் சற்றுச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சட்டம் இயற்றி விட்டால் போதாது. நோட்டிபிகேஷன் பிரகடனம் செய்து வீட்டில் ஒட்டிய பிறகு கட்டிடமாக இருந்தால் பத்து தினங்களிலும், குடிசையாக இருந்தால் மூன்று தினங்களிலும் என்று சொல்லி அவைகளை இடித்து எறியலாம், அதற்காக, பலாத்காரத்தைக்கூட உபயோகப்படுத்தலாம். நாலாவது பிரிவில் சொல்லப்பட்டிருக்கிறது—" **If any person refused or fails to comply with the order of eviction, the competent authority or any person specially authorized by it in this behalf may evict that person from and take possession of, the public premises and may, for that purpose, use such force as may be necessary.**" என்று பலாத்காரத்தை உபயோகித்து வெளியே தள்ளி, குடிசையைப் பிரித்து எரியலாம், இடித்துத் தள்ளலாம். அதனால் என்ன நஷ்டம் ஏற்பட்டாலும் பரவாயில்லை என்ற நிலையில் இருக்கிறார்கள். இதற்கு முன்பு ஒரு உத்தரவு இருக்கிறது. வீடில்லாத ஹரிஜன மக்கள் பொது இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தால் அவர்களை அப்புறப்படுத்த வேண்டுமென்றால் மாற்று இடம் கொடுத்து . . . . . .

**The Hon. Sri R. VENKATARAMAN**: 1956-க்கு முன்னுல் அவர்கள் இந்த விதமாகப் பொதுவிடங்களில் குடியிருந்தால் அவர்களுக்கு மாற்று இடம் கொடுப்பது என்று நாங்கள் விதி போட்டிருக் கிறோம். அந்த விதி இந்தச் சட்டத்தால் பாதிக்கப்படாது.

**Sri M. KALYANASUNDARAM**: இந்தச் சட்டம் வந்த பின்னுல் பார்த்துக் கொள்ளலாம். சட்டம் வருவது வரையில் போட்ட வர்களுக்கு மாற்று இடம் கொடுக்காவிட்டால் என்னவாகும்? ஸிட்டி இம்ப்ரூவ்மெண்ட் டிரஸ்ட்க்கு விற்று விட்ட நிலங்களுக்கு, 1956-க்கு......

**The Hon. Sri R. VENKATARAMAN**: இப்படி, சட்டத்தை விமர்சனம் செய்வது சரியல்ல, என்று தெரியப்படுத்திக் கொள் கிறேன். இந்தச் சட்டத்தில் என்ன சொல்லியிருக்கிறது? ஸிட்டி இம்ப் ரூவ்மெண்ட் டிரஸ்ட்க்குச் சொந்தமான நிலம் அல்லது ஆறு மாதங்களுக்கு முன் சிட்டி இம்ப்ரூவ்மெண்ட் ட்ரஸ்ட்டுக்குச் சொந்தமான நிலத்தில் தவருக குடிசை போட்டிருந்தால் எடுக்க முடியும் என்பதுதான்.

**Sri M. KALYANASUNDARAM**: அமைச்சர் அவர்களின் அபிப்பிராயம் அப்படி யிருக்கலாம். இந்த வாசகத்தைப் பார்க்கிறபோது, "ஆத்தரைஸ்டா" அல்லது "அன் ஆத்தரைஸ்டா" என்ற "டிஸ்ப்யூட்", வரும். "அன் ஆத்தரைஸ்ட் ஆக்குபேஷன்" என்று சொல்லி விடலாம், அப்படிச் சொல்லிக் கேஸ் போடலாம். அப்பொழுது சட்டத்தை உபயோகித்து அவர்களை வெளியேற்றலாம். அப்பீல் செய்வதற்கு அதி காரம் கொடுக்கப்பட்டிருப்பதாகச் சொல்கிருர்கள். அதற்கு, 90 நாட்கள் வரை கொடுக்கப்பட்டிருக்கிறது. மூன்று நாட்களில் குடிசைகளை பலாத்கார மாகப் பிரித்து எடுத்து விடலாம். பின், அப்பீல் கொடுத்து என்ன பிரயோஜனம்? எப்பொழுது அப்பீல் கொடுக்கலாம். நிலம் சொந்தம் என்று குறிப்பிட்டால் ஸ்டே கொடுக்கலாம் என்று சொல்லியிருக்கிருர்கள். அப்படி "ஸ்டே" அதிகாரம் கொடுத்திருப்பதால் எந்தவித பிரயோஜன மும் ஏற்படாது. அதிகாரிகளுக்கு, குடிசைகளை பலாத்காரம் உபயோகித்துப் பிரித்து எறிவதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனுல் பல சிக்கல் ஏற்படுமென்று அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்தச் சட்டத்தை அமுல் நடத்தி அதனுல் வரும் கெட்ட பெயரை அர சாங்கம் வாங்கிக் கொள்ளத் தயார் என்ருல் அதற்கு நான் ஆட்சேபிக்க வில்லை. இந்தச் சட்டத்தினுல் ஏற்படும் நிகழ்ச்சிகளினுல் போலீஸோடு மோதுதல் ஏற்படும். அரசாங்கம்—ஏழை மக்கள் மோதுதல் ஏற்படும். பிரித்து எரியக்கூடிய குடிசைகளுக்கு, அதனுல் ஏற்படும் சேதத்திற்குள்ள நஷ்ட யீட்டிற்கு உத்தரவாதம் கிடையாது. மாற்று இடத்திற்கு உத்தர வாதம் கிடையாது. திடீர் திடீரென்று குடிசைகள் பிறித்தெறியக்கூடிய நிலை ஏற்படுமாதலால் இதை அனுமதிக்க முடியாது. இது, சென்னை நகரத்திற்கு மட்டுமா? கிராமங்களில் உள்ள நத்தம் புறம்போக்குகளில் ஒரு அணு வசூல் செய்துகொண்டு குடிசை போட அனுமதிக்கலாம் என்று இருக்கிறது. இதனுல் அவைகளையும் "அன் ஆத்தரைஸ்ட் ஆக்குபேஷன்" என்று சொல்லி ரெவின்யூ அதிகாரிகள் அந்தக் குடிசைகளை மூன்று தினங்களில் பிரித்தெறிய அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சில குறிப் பிட்ட நகரங்களில் மட்டும் சேரிகள் ஏற்படுவதைத் தடுக்க வேண்டுமென்ற நோக்கமாயிருந்தால்—"**It extends to the whole of the State of Madras**" என்று இருக்க வேண்டாம். எல்லாப் பகுதிகளுக்கும் இது பொருந்தும். பல கிராமங்களில், நத்தம் புறம்போக்குகளில் குடிசை போடுவதை ஆட் சேபிக்க முடியாது. ஆட்சேபமற்ற புறம்போக்கு என்று "க்ளாஸிபிகேஷன்" இருக்கிறது. "பப்ளிக் ப்ரிமிஸெஸ்" என்று சொல்லி அகற்ற அதிகாரி களுக்கு அதிகாரம் கொடுத்திருக்கிருர்கள். அமைச்சர் அவர்கள் இதை சிந்தித்துப் பார்க்காமல் தான் கொடுத்திருக்கிருர்கள் என்று நினைக்கிறேன். இது ஒரு சமுதாயப் பிரச்னை சம்பந்தமானது. சட்டத்தின் மூலம் அதிகாரம் பெற்று, அடக்குமுறை மூலம் இதை அமுல் நடத்த முடியாது என்று அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஆகவேதான் சர்க்காரை ஆதரிக்கக்கூடிய திரு லாஸர் அவர்கள் கூட அதிலுள்ள பல

விளைவுகளை, அவர் என்போன்று எதிர்க்க முடியாத காரணத்தினால், பல விளைவுகளை மட்டும் சுட்டிக் காட்டினார்கள். நான் திருத்தம் கொடுத்திருப்பது கூட செலக்ட் கமிட்டியிலாவது இதுபற்றி யோசனை செய்வோம் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். இந்தச் சட்டத்தில் இருக்கக்கூடிய கருத்துக்களை, இந்தச் சட்டம் மூலம் சர்க்கார் ஏற்றுக் கொள்ள விரும்பும் அதிகாரங்களுக்கு நான் அனுமதி அளிக்க முடியாது, சம்மதம் தெரிவிக்க முடியாது என்று தெரிவித்துக்கொண்டு இந்த மசோதாவை நான் எதிர்க்கிறேன்.

**Sri K. R. NALLASIVAM**: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை, பொறுப்பில் உள்ளவர்கள் சென்னை நகரத்திற்கு மட்டும் இந்தச் சட்டத்தை அமுல் நடத்தவேண்டுமென்ற நோக்கத்தோடு கொண்டு வருவது போல் சொல்கிறார்கள். ஆனால் அதற்காக இந்த மசோதாவிலோ அல்லது தனி ஒரு மசோதாவாகவோ அதுபோன்ற ஒரு மசோதாவை அதுவும் இங்குள்ள ஏழை எளியவர்களுக்குப் பாதகம் இல்லாமல் கொண்டு வருவதில் எங்களுக்கு எந்தவித ஆட்சேபணையும் கிடையாது. அதே சமயத்தில் இந்தச் சட்டத்தைப் பொறுத்த வரையில் இந்த ராஜ்யத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் இது பொருந்துகிற முறையில்தான் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இந்த மசோதாவின் காரண காரிய விளக்கத்தில் குறிப்பிட்டிருப்பது, சுகாதாரத்திற்கு விரோதமாகவும், ஜன நெருக்கம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது என்ற முறையில் காரண காரிய விளக்கம் கூறப்படுகிறது. படிப்பதற்கு உண்மையில் இது மிகவும் இனிப்பாகத் தான் இருக்கிறது.

ஆனால் எனக்கு முன்னால் பேசிய திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் குறிப்பிட்டது போல், இதனால் ஏற்படக்கூடிய பலன் என்னவென்பதைப்பற்றி நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நாட்டிலுள்ள ஏழை எளிய ஜனங்கள் இன்றைக்கு கிராமப் புறங்களில் போய்ப் பார்த்தால் அவர்கள் இருக்கும் இடத்திற்கு வரையறையே கிடையாது. நகரத்தில் வேண்டுமென்றால் இன்னின்ன இடத்தில் தான் இருக்க முடியும் என்றிருக்கலாம். ஆனால் கிராமங்களை எடுத்துக் கொண்டால் சுடுகாடாக இருந்தாலும் சரி, இடுகாடாக இருந்தாலும் சரி, எங்கே அரை சென்டு இடம் கிடைக்கிறதோ இந்த இடங்களில் இருக்கின்றார்கள். அந்த இடத்தில் அவர்கள் விரும்பிப் போய் மனமகிழ்ச்சியோடு இருக்கவில்லை. வேறு வகையில்லாத நிலையில்தான் அந்த இடங்களில் இருந்து கொண்டிருக்கிறார்கள். சர்க்காரைப் பொறுத்த வரையில், இவர்களை எப்படி வெளியேற்றுவது என்பதில் அக்கறை செலுத்துவதை விட இவர்களுக்கு வேறு எப்படி இடம் கொடுப்பது என்பதற்கு ஏதாவது சட்டம் கொண்டு வந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். குறைந்தது 3 சென்டாவது, அவர்கள் பெரிய இடம் வேண்டுமென்று கேட்கவில்லை, குறைந்தது அந்த அளவுக்காவது இடம் கொடுப்பதற்குச் சட்டம் செய்து கொண்டு வந்திருந்தால் அவர்களுக்கு அனுகூலமாக இருந்திருக்கும். அதல்லாமல் சென்னை, மதுரை, கோவை போன்ற நகரங்களை மட்டும் வைத்துக் கொண்டு ஒட்டுமொத்தமாக மாகாணம் பூராவுக்கும் இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவது முறையானதல்ல. அதோடு நான் குறிப்பிட விரும்புவது, இதில் தவறுகள் ஏதாவது நடந்தால் அதைப் பற்றியுள்ள புகாரை ரெவின்யூ போர்டுக்கு அனுப்பலாம் என்று சொல்லப்பட்டிருப்பதைப் பற்றி கிராமத்திலுள்ள சாதாரண ஜனங்கள் இதைப் பற்றி புகார் செய்வதற்கு தினசரி ஆர். டி. ஓ. ஆபீசுக்கும் கலெக்டர் ஆபீசுக்கும் போய்க் கொண்டிருக்க முடியுமா? முடியவே முடியாது. இங்கு கூட சொல்லப்பட்டது, 56-க்கு முன்னால் இருந்த அரிஜனங்களைப் பற்றி. அதே போன்று தான் கிராமப்புறங்களில் பலரிடம் அவர்கள் இருக்கின்ற இடங்களுக்கு ஆதாரம் எதுவும் அவர்கள் கையில் இராது. 100-க்கு ஐந்து பேர்கள் அல்லது பத்து பேர்கள் தான் தீர்வை எல்லாம் கொடுத்துச் சரியான ஆதாரத்தை வைத்துக் கொண்டிருப்பார்கள். நூற்றுக்கு 90 பேர்களிடம் ஆதாரமே கிடையாது. அதிலும் நிச்சயமாகப் புறம்போக்குகளில் இருப்பவர்களுக்கு எந்த விதமான ஆதாரமும் கிடையாது. ஆகவே

நான் கேட்டுக்கொள்வது எல்லாம் இப்பேர்பட்டவர்களுக்கு இடம் கொடுத்து விட்டு, அதன் பின்னால் இது போன்ற ஒரு மசோதாவைக் கொண்டு வர வேண்டும் என்பது தான். நகரத்திலுள்ள சேரிகளை எல்லாம் போக்க வேண்டும் என்ற நினைப்பில் வேண்டுமென்றால் இந்தச் சட்டத்தை சர்க்கார் கொண்டு வந்திருக்கலாம். ஆனால் கிராமங்களை எடுத்துக் கொண்டால், கிராமங்களில் இதைப்பற்றி எதிர்க் கட்சிகள் பிரசாரம் செய்ய வேண்டிய தேவையில்லை. பொதுவாக இந்தச் சட்டத்தை வைத்துக் கொண்டு கிராமங்களில் இருக்கின்ற ரெவின்யூ அதிகாரிகள் இதைப் பலவாறாக உபயோகித்துக் கொண்டிருப்பார்கள். இதைப்பற்றி முக்கியமாக என் கண் முன்னால் தோன்றியது கிராம கர்ணம் தான். இன்றைக்கு அவர்களுடைய தயவில் தான் கிராமத்திலுள்ள ஜனங்கள் புறம்போக்கு இடங்களில் இருந்து கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில் இப்பேர்பட்ட ஒரு சட்டமும் வந்து விட்டால் அவர்களுடைய தொல்லையைப்பற்றி சொல்லவே முடியாது. ஆகவே இதையெல்லாம் சர்க்கார் கருத்தில் கொண்டு, இதை நல்ல முறையில் சீர்திருத்தி அமைப்பதற்காக ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு, அனுப்பிக் கொஞ்சம் காலம்தாழ்த்தி, எந்த குறிக்கோளுக்காக இது கொண்டுவரப் பட்டிருக்கிறதோ அந்த குறிக்கோள் நிறைவேறுகின்ற முறையில் இதை மாற்றி அமைத்து அதற்குப் பின்னால் நிறைவேற்றினால் நன்றாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொண்டு, இதைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

## IV.—ANNOUNCEMENTS.

### (1) BUSINESS OF THE HOUSE.

MR. SPEAKER : I understand from Government that they are not bringing forward the Madras Chit Funds Bill, 1960, in this session. Therefore, it is likely that the Business of the House may be over by to-morrow. I am announcing this information so that hon. Members who want to leave for their respective places to-morrow itself, may make arrangements for their departure.

சிட் பண்ட் மசோதா இப்போது இந்தக் கூட்டத்தில் விவாதத்திற்கு வரவில்லை என்று தெரிவித்திருக்கிறார்கள். ஆதலால் நாளைக்கே ஊருக்குப் போகவேண்டிய அங்கத்தினர்கள் அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்து கொள்ளலாம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## III. GOVERNMENT BILLS—*cont.*

### (1) THE MADRAS PUBLIC PREMISES (EVICTION OF UNAUTHORISED OCCUPANTS) BILL, 1960 (L.A. BILL NO. 24 OF 1960)—*cont.*

SRI V. SUBBIAH : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவானது கிராமப் பகுதிகளில் வரும்போது எவ்வளவு கஷ்டங்களைக் கொடுக்கும் என்பதைச் சற்று சொல்ல விரும்புகிறேன். இந்த மாதிரியான சட்டங்கள் விவாசாயிகளிடையே வரும்போது பெரும்பாலும் துஷ்பிரயோகம் செய்யப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக நான் சொல்ல விரும்புவது, ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டம், இனாம்தார் ஒழிப்புச் சட்டம் வந்தபோதும் சட்ட ரீதியாக எவ்வளவோ பாதுகாப்புகள் கொடுக்கப்பட்டிருந்தும் கூட சாதாரண விவசாயிகளுக்கு எவ்வளவோ கஷ்டங்கள் வந்து நேர்ந்தன. ஒருவரின் பெயரில் ஒரு இடம் இருந்தாலும் கூட பல கேஸ்கள் அதைப் பற்றிக் கோர்ட்டில் இருந்து கொண்டிருந்தது. இப்போதும் அதற்குக் கலெக்டர் அவர்களால் நோட்டீஸ் கொடுக்கப்பட்டு வருவதை நாம் பார்க்கின்றோம். இவ்விதம் சொல்லப்படுகின்ற இடங்கள் இவ்வாறு தகராறுகள் ஏற்பட்ட பிறகு புறம்போக்கு அல்லது தரிசு என்று அறிவிக்கப்படுகிறது. இந்த

[9th September 1960

(2) THE MADRAS STATE HOUSING BOARD BILL, 1960
(L.A. BILL NO. 31 OF 1960).

* THE HON. SRI R. VENKATARAMAN: Mr. Speaker, I move—

"That the Madras State Housing Board Bill, 1960 [a] (L.A. Bill No. 31 of 1960) be referred to a Select Committee of the House consisting of the following Members of the Assembly:—

(1) The Hon. Sri M. Bhaktavatsalam.
(2) Sri P. G. Karuthiruman.
(3) Sri K. S. G. Haja Sheriff.
(4) Sri K. Vinayakam.
(5) Sri R. Krishnasami Naidu.
(6) Sri V. Vedayyan.
(7) Sri T. K. Subbiah.
(8) Sri V. Sankaran.
(9) Sri S. Ranganatha Mudaliar.
(10) Sri K. S. Subramania Gounder.
(11) Sri A. V. P. Periavalaguruva Reddi
(12) Sri N. K. Palanisami.
(13) Sri M. Anandan.
(14) Sri S. T. Subbiah Gounder.
(15) Sri K. R. Nallasivam."

Sir, under the Rules, the Mover of the Bill is also a Member of the Select Committee.

கனம் சபாநாயகர் அவர்களே, இதற்கு முன்னால் விவாதித்த மசோதாவும் நான் இப்பொழுது கொண்டு வந்திருக்கிற மசோதாவும் ஒன்றோடொன்று இணைக்கப்பட்ட மசோதாக்கள். நம் ராஜ்யத்தில் வீட்டு வசதியைப் பெருக்க வேண்டும். வீட்டு வசதிகள் தேவை. சமுதாயம் மாறிக்கொண்டு வருகிறபோது அதிகரித்துக்கொண்டே போகிறது. ஜனத் தொகை அதிகரிப்பினால் மட்டும் வீட்டு வசதித் தேவை அதிகரிக்கிறது என்பதல்ல. பொதுவாக, கூட்டுக் குடும்பம் இருந்த இடத்தில், பத்து பேர்கள் முன்பு ஒரு வீட்டிலே இருந்திருப்பார்கள். இன்று அவரவர்கள் பல இடங்களில் வேலை செய்து தனித்தனிக் குடும்பம் ஆரம்பித்தவுடன் பத்து வீடுகளின் தேவை வருகிறது.

(Deputy Speaker in the Chair.)

ஆகவே, இன்று சமுதாயத்தில் ஏற்பட்டிருக்கக்கூடிய மாறுதல்கள் காரணமாக வீடுகளுக்கு அதிகமான தேவை, ஜனத்தொகை வளர்ச்சியைவிட அதிகமான தேவை இன்று நாட்டில் ஏற்பட்டிருக்கிறது. இன்னும் பல நகரங்களில் தொழிற்சாலைகள் அமைகிற காரணத்தால் வேறு இடங் களிலிருந்து குடி புகுகிற ஒரு பிரச்னை வந்து, அதன் மூலமாகவும் வீட்டு நெருக்கடி பல நகரங்களில் தோன்றிக் கொண்டு வருகிறது. இவை எல்லாவற்றையும் கண்காணிப்பதற்கு பலவித நிறுவனங்கள் இருக் கின்றன. கூட்டுறவு சங்கங்கள் மூலம் வீடு கட்டுவது, லி.ஐ.டி. மூலம் வீடு கட்டுவது, சில இடங்களில் ஸ்தல ஸ்தாபனம் வீடு கட்டுவது, இன்னும் "ஸ்லம் க்ளியரன்ஸ்" போன்றவை பாதி ஸ்தல ஸ்தாபனங்

---

[a] Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 22nd August 1960.

9th September 1960] [Sri R. Venkataraman]

களுக்கும், பாதி ஸி.ஐ.டி.க்கும் பிரித்துக் கொடுத்திருப்பது, சிலவிடங்களில் முனிசிபாலிடிகளுக்கு கொடுத்திருப்பது இப்படி பல ஸ்தாபனங்கள் இருக்கின்றன.

வீடு கட்டுவது என்று சொன்னால், இப்போதுள்ள நிலையில் நீண்ட நாள் ஆகின்றது. காரணம், சிமிண்ட் கிடைக்காததாலோ அல்லது இரும்பு கிடைக்காததாலோ அல்ல. டௌன் பிளானிங் சட்டப்படி லே அவுட் போட வேண்டும். வேறு பல இலாகாக்களை அணுகி அவர்களுடைய சம்மதம் பெற வேண்டும். இன்னும் இது போன்ற எத்தனையோ கஷ்டங்கள் எல்லாம் இருக்கின்றன. இந்த முறையில் காலனியோ அல்லது வீடோ கட்ட வேண்டுமென்றால் பல வருடங்கள் ஆகின்றன. இதைத் தவிர்ப்பதற்காக 1958-வது வருடத்தில் சட்டபூர்வமல்லாத வகையில் ஒரு ஹௌஸிங் போர்ட் ஏற்படுத்தினோம். அதில் டவுன் பிளானிங் டயரக்டர், சீப் என்ஜினியர், ரெஜிஸ்திரார், லேபர் கமிஷனர், இவ்விதம் இது சம்மந்தப்பட்ட எல்லா இலாகா தலைவர்களும் இதில் அங்கத்தினர்களாக இருந்தார்கள். இவ்விதம் ஒரு போர்டை நிறுவி, இது நல்ல முறையில் செயலாற்றுமா என்பதைப் பற்றி ஆராய்ச்சி செய்தோம். இம்மாதிரியான ஒரு போர்டு நிறுவப்பட்டதன் காரணமாக பல பிரச்னைகளை சீக்கிரமாகத் தீர்க்க முடிந்தது. உதாரணமாக ஒரு போர்ட் கூட்டத்தில் எல்லா அதிகாரிகளும் வந்திருப்பார்கள். அதில் டௌன் பிளானிங் டயரக்டர் அவருடைய ஆட்சேபனைகளைப் பற்றி சொல்லலாம், பப்ளிக் ஹெல்த் டயரக்டர் அவருடைய ஆட்சேபனைகளைப் பற்றி சொல்லலாம், இவ்விதமாக ஒருவருக்கொருவர் தங்களுக்கு இருக்கின்ற கஷ்டங்களை எடுத்துச் சொல்லி விவாதித்து அங்கேயே முடிவு எடுத்துக்கொள்வது என்பது மிகவும் வசதியாக இருந்து வருகிறது. இவ்வாறு முடிவு எடுப்பதால் சுலபமாக திட்டங்களை நிறைவேற்ற முடிகிறது. ஆகவேதான் இப்போது நாம் சட்டபூர்வமில்லாத ஒரு போர்டு அமைத்து, அதன் மூலம் கிடைத்த அனுபவத்தை வைத்துக்கொண்டு இந்த போர்டை சட்டபூர்வமான ஒரு போர்டாக அமைக்கவேண்டும் என்ற முடிவுக்கு இப்போது நாம் வந்திருக்கிறோம்.

இரண்டாவது, சட்டபூர்வமாக இயங்கப் போகின்ற இந்த ஹௌஸிங் போர்டுக்கு கடன் வாங்குவது, டிபெஞ்சர்கள் கொடுப்பது முதலியவைகளுக்கும் அதிகாரம் கொடுக்கிறோம். வீடுகள் கட்டுவது என்று சொன்னால் பெருவாரியான அளவில் கடன் வசதி செய்து கொடுத்தால் போதும். சில துறைகளில்தான் மான்யங்கள் தேவைப்படுகிறதே தவிர, பெருவாரியான கடன் கொடுத்தால் வீடு கட்டுவதற்கு எத்தனையோ பேர்கள் தயாராய் இருந்து கொண்டிருக்கிறார்கள். இவ்விதம் கடன் கொடுப்பதை சரியாக வசூல் செய்ய வேண்டும். இதற்கு இந்தச் சட்டபூர்வமான போர்டுக்கு அதிகாரம் கொடுத்துவிடுவோமானால், கடன்களை வசூலிப்பதிலும் சரி, டிபெஞ்சர்கள் வாங்குவதாக இருந்தாலும் சரி, இதற்கெல்லாம் பல ஸ்கீம்களைப் போடுவதற்கு உதவியாக இருக்கும்.

அடுத்தபடியாக, இதில் இருக்கக்கூடிய மாறுதல் என்னவென்று சொன்னால், சென்னை நகரத்தைப் பொறுத்த வரையில் ஸி.ஐ.டி. என்ற ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்தினோம். அதன் மூலமாக சென்னையில் இருக்கின்ற எல்லாவிதமான வீடுகளைக் கட்டுவதற்கும், சேரி அமைப்புத் திட்டத்தை அமுல் நடத்துவதற்கும் பல நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டிருக்கிறது. மற்றொரு பகுதியில் கார்ப்பரேஷன் வேறு பல நடவடிக்கைகளை இதற்காக எடுத்துக் கொண்டிருக்கின்றன. இன்றைக்கு ராஜ்யம் பூராவும் இந்த போர்டை ஏற்படுத்துகின்ற நேரத்தில் சென்னைக்கு மட்டும் என்று ஏற்படுத்தியிருக்கின்ற சி.ஐ.டி. ஸ்தாபனம் தேவையில்லாமல் போய் விடுகின்றது. அதற்குப் பதிலாக ஸிட்டி யூனிட் என்று ஒன்றை வைத்துக்கொள்ளலாம். அதேபோன்று ஒவ்வொரு ஜில்லாக்களுக்கும் ஒவ்வொரு யூனிட் வைத்துக்கொள்ளலாம். இந்த யூனிட்டுகள் எல்லாம் இந்த போர்டின் கீழ் ஸ்தாபனங்களாக இருக்கும். அதாவது போர்டினுடைய அதிகாரத்தின்கீழ் செய்யப்படுகின்ற வேலைகளை எல்லாம் இந்த யூனிட்டுகள் நிறைவேற்றிக் கொடுக்கும். ஆகவே எல்லாவற்றையும் ஒன்றுக்

[Sri R. Venkataraman] [9th September 1960

கொன்று இணைத்து நல்ல முறையில் வேலை செய்வதற்கு இது வழிவகை செய்யும். உதாரணமாக நம்முடைய ஹரிஜன இலாகா அமைச்சர் அவர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய இலாகா மூலம் சில இடங்களில் வீடுகள் கட்டப்படுகின்றன. லேபர் கமிஷனர் மூலமாகவும் தொழிலாளர்கள் சம்பந்தமாக சில இடங்களில் வீடுகள் கட்டப்படுகின்றன. இது தவிர கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவும் வீடுகள் கட்டப்படுகின்றன. இவ்விதம் இந்த இலாகாக்கள் எல்லாம் தனித்தனியாக திட்டம் போட்டுக் கொண்டு போவதால் நடைமுறையில் சில முரண்பாடுகளும் வந்து சேருகின்றன. இதன் காரணமாக சில திட்டங்களை சரியானபடி அமுலாக்க முடியாமல் போகின்றது. ஸி.ஐ.டி. ஸ்தாபனத்தை மதராஸ் ஸிட்டிக்கு என்று ஒரு யூனிட்டாக வைத்துக்கொண்டு தனியாகச் செயல்பட்டு, அதற்கான ஸ்கீம்களை நிறைவேற்றிக்கொண்டால் மிக உதவியாக இருக்கும். ஆகவே இனிமேல் தேவையில்லாத ஸி.ஐ.டி.யை கலைத்துவிடுவதற்கும் இதில் தகுந்த ஷரத்துக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

அடுத்ததாக, ஹௌஸிங் போர்டுக்கு எதையெல்லாம் செய்யலாம் என்றும் அவற்றிற்கு வேண்டிய அதிகாரமும் கொடுத்திருக்கிறோம். அவ்வாறு எடுத்துக்கொண்டால், பல திட்டங்களை நாம் மேற்கொண்டிருக் கிறோம். ஸ்லம் இம்ப்ரூவ்மெண்ட் ஸ்கீம் இருக்கிறது. உதாரணமாக திரு. அன்பழகன் அவர்கள் இதனால் பல கஷ்டங்கள் ஏற்படு கின்றன என்பதைப் பற்றி எடுத்துச் சொன்னார்கள். சர்க்காருக்கும் இதனால் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இன்றைக்கு சில பெரிய இடங் களை எல்லாம் பணக்காரர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள், அவர் களிடமிருந்து 20 ஏக்கரோ, 30 ஏக்கரோ, வாங்கிவிடலாமே என்று சொல்லு கின்றோம். அவ்வாறு வாங்கிக் கொடுக்கவேண்டுமென்றால், அதை எடுத்துக் கொள்வதற்கு பல நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. என்னுடைய ஒரு அனுபவத்தைச் சொல்லுகிறேன். மேற்கு சென்னையில் ஒரு சிறிய நகரத்தை ஆரம்பித்தால் ஸ்லம் இம்ப்ரூவ்மெண்ட் ஸ்கீமை நல்ல முறையில் நடத்தலாம் என்ற எண்ணத்துடன் சுமார் 1,200 ஏக்கர் நிலங்களை எடுக்கவேண்டும் என்று திட்டமிட்டிருந்தோம். இவ்வாறு முடிவு செய்த கொஞ்ச காலத்திற்குள்ளாகவே எங்கள் நிலத்திற்கு விலக்கு கொடுத்து விடுங்கள் என்று பல காரணங்களைக் கூறி மனுக்கள் ஏராளம் வந்து விட்டன. அதில் கூறப்பட்டிருக்கும் காரணங்கள் எல்லாம் நியாய மான காரணங்கள்தான். இவ்விதம் எல்லா மனுக்களின் பிரகாரம் விதி விலக்கு கொடுத்துவிட்டு கடைசியில் பார்த்தால் ஒரு ஏக்கர்கூட மிஞ்சாது. இதற்கெல்லாம் காரணம் என்னவென்றால் போதிய அளவு நிலம் இல்லை என்பதைத்தான் காட்டுகின்றன. நம் நாட்டில் ஏற்பட்டிருக் கின்ற ஜன நெருக்கத்தின் காரணமாக போதிய அளவுக்கு இடமில்லை. மேல் நாடுகளில் செய்வதை எடுத்துக்கொண்டால், லாண்டு டெவலப்மெண்ட் போர்ட் என்று போடுகிறார்கள், நிலங்கள் ஏராளமாக இருக் கின்றன. சர்க்காரிடத்தில் உதவியைப் பெற்று, அந்த இடத்தில் நல்ல ரோடுகள், தண்ணீர் வசதி இவைகளை எல்லாம் செய்து கொடுத்து விடு கிறார்கள். இவ்விதம்தான் அவர்கள் மேல் நாடுகளில் செய்துகொண்டிருப் பது. ஆனால் நம் நாட்டிலுள்ள நிலைமையைப் பொறுத்தவரை யாராவது சொந்தமாக வைத்திருக்கின்ற இடத்தில்தான் லாண்ட் இம்ப்ரூவ்மெண்ட் செய்ய வேண்டியதாக இருக்கிறது. இவ்விதம் செய்ய முன்வருகின்ற பொழுது நிர்ப்பந்தமாகத்தான் சொந்தக்காரர்களிடமிருந்து நிலத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. பல இடங்களிலும் லாண்ட் அக்விஸிஷன் மூலமாகத்தான் இடங்களை வாங்கவேண்டியவர் களாக இருக்கிறோம். அதே போன்றுதான் தவறான இடங்களில் குடி யிருக்கிறவர்களை வேறு இடங்களுக்கு மாற்ற வேண்டுமென்றாலும் நிர்ப் பந்தம் செய்ய வேண்டியிருக்கிறது. இந்த ஏற்பாடுகள் எல்லாம் இனி மேல் ஹௌஸிங் போர்ட் உத்தரவின் மூலமாக நடைபெறும். 1960 முதல் ஒரு திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்று நாம் முடிவு செய்வோமானால் புதிதாக செய்ய வேண்டிய காரியங்களை எல்லாம் இந்த ஹௌஸிங் போர்டு செய்யும். இவ்விதம் நாம் போடும் திட்டங்களை எல்லாம் உடனடியாக நிறைவேற்றுவதற்கு சரியான ஸ்தாபனம் இல்லாவிட்டால்

நாம் போடும் திட்டங்கள், நாம் போடும் சட்டங்கள் எல்லாம் உதவாக்கரைகளாகப் போய்விடும். அதோடு முக்கியமாக இம்மாதிரியான சட்டங்களை எல்லாம் நிறைவேற்றிவிட்டு, சட்டத்திற்குப் புறம்பாக வீடுகளையும் மற்றவைகளையும் கட்டுகிறவர்களை நாம் விட்டுக்கொண்டே போவோமேயானால், பிற்காலத்தில் இந்தப் பிரச்னையை நாம் சமாளிக்க முடியாத நிலைமை வந்துவிடும். ஆகவேதான் இதைத் தவிர்ப்பதற்கான வழிமுறைகளையும் இதில் ஏற்படுத்தியிருக்கிறோம். அதே நேரத்தில் பல பகுதிகளிலும் மக்கள் நல்ல முறையில் வாழக் கூடிய முறையில் வீடுகளைக் கட்டிக் கொடுப்பதற்கான திட்டங்களை நிறைவேற்றிக் கொடுப்பதை கவனித்துக் கொள்ளவும், நமது தேவைக்கு வேண்டிய இடங்களைக் கண்டுபிடித்து அவைகளைச் சர்க்காருக்கு எடுத்துக்கொள்ளவும் இந்த போர்டு வேலை செய்யும்.

சமீபத்தில் கோடம்பாக்கத்தில் 600 ஏக்கர் நிலத்தை வாங்கி அதில் சேரியில் இருந்தவர்கள் வந்து தங்குவதற்குக் கொடுத்தோம். அப்போது அங்குள்ளவர்கள் என்னைத் திட்டினார்கள். திட்டினார்கள் என்று சொல்வதை விட சபித்தார்கள் என்று சொன்னால்கூட அதில் தவறு இல்லை என்று நினைக்கிறேன். அப்புறம்—ஒரு மாதத்திற்கு முன்னால்—அங்கே போனேன். யார் என்னை "இந்தக் காட்டில் கொண்டு வந்து விட்டுவிட்டீர்களே" என்று சொன்னார்களோ அவர்கள் "நீங்கள் எங்களுக்குக் கொடுத்ததைப் பற்றி ரொம்பவும் சந்தோஷம், இந்த விதமான வசதிகள் கிடைக்கும் என்று தெரியாது, இன்னும் எங்களுடைய சொந்தக்காரர்கள் இருக்கிறார்கள், அவர்களுக்கும் இடம் கொடுங்கள்" என்று கேட்க ஆரம்பித்து விட்டார்கள். ஆக பொது நன்மைக்காக ஒரு காரியத்தைச் செய்ய முன் வரும்போது, அதிலும் முக்கியமாக சுகாதார வசதியுடன் நல்ல முறையில் வாழ்க்கை நடத்த வசதி செய்யும்போது, சில இடையூறுகள், கஷ்டங்கள், சில தொந்தரவுகள் இருக்கத்தான் செய்யும். அதை மிகைப்படுத்தக் கூடாது. இதில் அக்கறை கொண்டவர்களெல்லோரும் ஒத்துழைத்தால் தான் திட்டம் வெற்றிகரமாக நடக்க முடியும். உதாரணமாக மேல் நாடுகளில் பார்த்தால் தொழிலாளிகள் எந்த இடத்தில் வேலை செய்கிறார்களோ, அந்த இடத்தில் ஃபேக்டரியில் வேலை முடிந்தவுடன் அந்த ஃபேக்டரியை கண்ணால் பார்க்கக்கூட மறுத்து விடுகிறார்கள். அங்கு அவர்களுக்கு வேண்டிய நிலம் கிடைப்பதால் ஃபேக்டரிக்கு அருகாமையிலேயே வீடு கட்டிக் கொடுக்கிறோம் என்று சொன்னால் வேண்டாமென்று சொல்லுகிறார்கள். வேலை செய்யும் இடத்தை மறந்து வேறு இடத்தில் தோட்டங்கள் வைத்து, செடிகள் வைத்து, 8 மணி நேரம் வேலை செய்யும் நேரத்தைத் தவிர பாக்கி நேரத்தை ஃபேக்டரியை மறந்து இருக்கத்தான் விரும்புகிறார்கள். நம் தொழிலாளர்கள் அம்மாதிரி விரும்பவில்லை என்பதல்ல. நான் அதை எடுத்துச் சொல்லவில்லை. அந்த மாதிரியான கருத்துக்களை எடுத்துச் சொல்லாத காரணத்தினால், எந்தவிதமான வாழ்க்கையை நடத்த முடியும் என்று எடுத்துச் சொல்லாத காரணத்தினால் அவர்கள் மனதில் தப்பான அபிப்பிராயம் பரவிக்கொண்டிருக்கிறது. இருக்கும் இடம் ஃபேக்டரிக்கு அருகாமையிலேயே இருக்கவேண்டும் என்று நினைப்பதும், அருகாமையிலே என்ன விதமான கஷ்டங்கள் இருந்தாலும், அந்த இடத்தில் வசதி செய்து கொடுக்கவேண்டுமென்று சொல்வதும் பொருத்தமாகாது. ஹௌஸிங் போர்டு மசோதாவில் லாண்ட் டெவலப்மெண்ட் மிக முக்கியம். லாண்ட் டெவலப்மெண்ட் என்பது அதிக ஏக்கர் நிலத்தை வாங்கி பல பகுதிகளாக மக்களுக்குப் பிரித்துக் கொடுத்து, ரோடுகள் போட்டு, தண்ணீர் வசதி செய்து, இன்னும் சாக்கடை வசதிகள் செய்து அதன் மூலமாக வசதிகள் பெருக வேண்டும் என்று கொண்டு வரப்பட்டிருக்கிறது.

இதிலே ஒரே ஒரு குறை சொல்லலாம். அதையும் முன்னதாகவே நான் சொல்லிவிடுகிறேன். அதற்குக் காரணம் என்ன வென்றும் சொல்லி விடுகிறேன். இந்த போர்டின் அமைப்பைப் பார்த்தால் 11 பேர்கள் உத்தியோகஸ்தர்களாக இருக்கிறார்கள். உத்தியோகப் பற்றற்றவர்களாக 4 பேர்களைப் போட்டிருக்கிறது. அது ஒரு குறை என்று சொல்லலாம். இந்த போர்டின் அலுவல்களைப் பார்த்தால் அது அவசியம்தான் என்று

[Sri R. Venkataraman] [9th September 1960

நன்ருகத் தெரியும். இது ஆலோசனை போர்டு அல்ல—நிர்வாக போர்டு. அட்வைஸரி போர்டாக இருந்தால் உத்தியோகப் பற்றற்றவர்கள் அதிகமாக இருக்கலாம். இது நிர்வாக போர்டாக இருப்பதால் யார் யார் நிர்வாகத்தைச் செய்ய முடியுமோ அவர்கள்தான் இதில் போடப்பட்டிருக்கிருர்கள். அப்படிப் பார்க்கும்போது டைரக்டர் ஆப் டவுன் பிளானிங் வேண்டும். அங்கு இருக்ககூடிய பப்ளிக் ஹெல்த் அத்தாரிட்டி வேண்டும். அப்புறம் கார்ப்பொரேஷன் கமிஷனர், லேபர் கமிஷனர், இந்த முறையில் எந்தெந்த அதிகாரிகள் இதில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமோ அவர்களைத் தான் முக்கியமாகப் போட்டிருக்கிறது. மசோதாவின் 4-வது பகுதியைப் பார்த்தால் சீஃப் என்ஜினீயர் (பப்ளிக் வொர்க்ஸ்), ஜாயின்ட் டைரக்டர் ஆஃப் டவுன் பிளானிங், இன்ஸ்பெக்டர் ஆஃப் முனிசிபல் கவுன்சில்ஸ் அண்ட் லோகல் போர்ட்ஸ், கமிஷனர் ஆஃப் லேபர், கார்ப்பொரேஷன் கமிஷனர், ரிஜிஸ்டிரார் ஆஃப் கோவாபரேடிவ் சொஸைடீஸ், டைரக்டர் ஆஃப் ஹரிஜன் வெல்ப்பேர், டைரக்டர் ஆஃப் பப்ளிக் ஹெல்த், செக்ரட்டரி டு கவர்ன்மெண்ட், பைனன்ஸ் டிபார்டுமெண்ட், சூபரின்டெண்டிங் என்ஜினீயர், ரூரல் ஹௌஸிங் ஸெல், இன்னும் ஒரு ஆபீஸர் டெவலப்மெண்ட் கமிஷனரால் நாமினேட் செய்யப்படுபவர் இவர்களெல்லாம் இந்த போர்டில் அங்கத்தினர்களாக இருப்பார்களென்று போடப்பட்டிருக்கிறது. இவர்களைத் தவிர உத்தியோகப் பற்றற்றவர்கள் 4 பேர்கள் அங்கத்தினர்களாக இருப்பார்கள் என்றும் போடப்பட்டுள்ளது. அவர்கள் கூறக்கூடிய ஆலோசனையெல்லாம் எந்த இடத்தில் வீடு கட்டும் திட்டம் செய்யலாம் என்பதைப்பற்றி இருக்கலாம். அவர்களுடைய ஆலோசனை அந்த விஷயத்தில் உபயோகமாக இருக்கும். இந்த உத்தியோகப் பற்றற்றவர்கள் 4 பேர்களில் ஒருவர் என்ஜினீயராகவோ அல்லது ஆர்க்கிடெக்டாகவோ இருந்து, வீடு கட்டுவதில் அனுபவமுள்ளவராகவும், சர்க்காரிலோ சர்க்கார் மேற்பார்வை இருக்கக்கூடிய ஸ்தாபனங்களிலோ வேலை செய்யாதவராக இருக்க வேண்டுமென்று போட்டிருக்கிறது. காரணம் என்ன என்ருல், சர்க்கார் என்ஜினீயர் ஒன்று சொன்னுல் அது சரியா, தவரு என்று பார்த்துச் சொல்ல ஒரு ''செகண்ட் ஒப்பினியன்'' வேண்டுமென்று, என்ஜினீயர் ஒருவரை—என்ஜினீயரிங் திறமை பெற்றவர் ஒருவரை—சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று போட்டிருக்கிறது. இது நிர்வாக போர்டாக இருப்பதால் நிர்வாகம் செய்யும் உத்தியோகஸ்தர்களைப் போட வேண்டிய அவசியம் இருக்கிறது.

இந்த மசோதாவில் பல ஷரத்துக்கள் இருக்கின்றன. பொதுவாக ''ஸி.ஐ.டி. ஆக்ட்''டில் உள்ள ஷரத்துக்களையும், ''பாம்பே ஹவுஸிங் போர்ட் ஆக்ட்''டில் உள்ள ஷரத்துக்களையும் வைத்து இந்த மசோதா தயாரிக்கப் பட்டிருக்கிறது. கமிட்டியிலே பரிசிலனை செய்யும்போது பகுதிவாரியாகப் பார்க்கலாம். ஆகவே இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: Motion moved—

"That the Madras State Housing Board Bill, 1960 (L.A. Bill No. 31 of 1960) be referred to a Select Committee of the House consisting of the following Members of the Assembly :—

(1) The Hon. Sri M. Bhaktavatsalam.
(2) Sri P. G. Karuthiruman.
(3) Sri K. S. G. Haja Sheriff.
(4) Sri K. Vinayakam.
(5) Sri R. Krishnasami Naidu.
(6) Sri V. Vedayyan.
(7) Sri T. K. Subbiah.
(8) Sri V. Sankaran.
(9) Sri S. Ranganatha Mudaliar.
(10) Sri K. S. Subramania Gounder.

9th September 1960] [Deputy Speaker]

(11) Sri A. V. P. Periavalaguruva Reddi.
(12) Sri N. K. Palanisami.
(13) Sri M. Anandan.
(14) Sri S. T. Subbiah Gounder.
(15) Sri K. R. Nallasivam.
(16) The Hon. Sri R. Venkataraman (Mover of the Bill)."

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Deputy Speaker, Sir, in the place of the hon. Member, Sri K. R. Nallasivam, it is suggested that the name of the hon. Member, Sri S. Pakkirisami Pillai may be substituted.

DEPUTY SPEAKER : Yes, the name of the hon. Member, Sri S. Pakkirisami Pillai, will be substituted for the name of the hon. Member, Sri K. R. Nallasivam.

The Motion is before the House for discussion.

SRI K. SATTANATHA KARAYALAR : உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா ஒரு நல்ல நோக்கத்தோடு கொண்டு வரப் பட்டுள்ளது என்பதிலே யாருக்கும் ஆட்சேபணை இருக்க முடியாது. இன்று நாட்டிலே இருக்கக்கூடிய பல்வேறு வீடு கட்டும் திட்டங்களை இணைக்கக் கூடிய முறையிலும், ஒரு இணைந்த வீடு கட்டும் திட்டம் நாட்டிலே அமுலில் இருக்கவேண்டும் என்ற நோக்கத்தோடும் இந்த மசோதா கொண்டுவரப் பட்டுள்ளது. ஆனால் தனிப்பட்ட வீடு கட்டுவதற்குள்ள திட்டம் என்று மாத்திரம் பிரத்தியேகமாகப் பிரித்துப் பார்ப்பது எந்த அளவு பயன் தரும் என்று சொல்ல முடியாது. சட்டமாக இயற்றி விட்டால் மாத்திரம் நாட்டிலே இருக்கக்கூடிய இட நெருக்கடி, வீட்டு நெருக்கடி, குடி மனை நெருக்கடி இவைகளைச் சமாளித்து விடலாம் என்று எண்ண முடியாது. இன்று வீடு என்று வரும்போது, குடியிருப்பு மனை என்று வரும்போது, அவரவர்கள் வேலை செய்யக்கூடிய இடத்திற்கு அருகாமையிலேயே, மருத் துவ வசதி இருக்கக்கூடிய இடத்திற்கு அரு காமையிலேயே, அதுவும் தவிர மற்ற சௌகரியங்கள் இருக்கக்கூடிய முறையில் இருக்கவேண்டும். இதிலே மிகவும் முற்போக்கான, மிகவும் தீவிரமான, பல்வேறு திட்டங்கள் இருக்கவேண்டியது அவசியம். குறிப்பாக நகரங்களைப் பொறுத்தமட்டில் இது போன்ற சட்டங்களை இயற்றி விட்டால் போதாது. சில மாஸ்டர் பிளான் கள் அமைக்கவேண்டும். நாட்டில் இருக்கக்கூடிய தொழில் அபிவிருத்தி யையும், தொழில் வளர்ச்சியையும் மனதில் கொண்டு, அந்த முறையில் தொழில் வளர்ச்சி அடிப்படையில், தொழில் வளர்ச்சியினால் இட நெருக்கடி இருக்கக்கூடிய நகரங்களைப் புனரமைக்கக்கூடிய முறையில் சில மாஸ்டர் பிளான்கள் மிக மிக அவசியம். இது ஒரு ஐந்தாண்டு காலத்திலோ அல்லது இரண்டு ஐந்தாண்டு காலத்திலோ நிறைவேறக் கூடியதல்ல. பல ஐந்தாண்டு காலம் பிடிக்கலாம். இன்று நமது மாநிலத்தில் இருக்கக் கூடிய சென்னை, திருச்சி, மதுரை, கோயமுத்தூர், நெய்வேலி, திரு நெல்வேலி போன்ற இடங்கள் வருங்காலத்தில்—50 ஆண்டுகளுக்குப் பிறகு —எப்படி உருப்பெறும் என்ற கண்ணோட்டம் இருப்பது அவசியம். டவுன் பிளானிங் திட்டங்கள் போதாது. ஏனென்றால் ஒரு ஆண்டிலே, இரண்டு ஆண்டிலே, 5 ஆண்டிலே என்ன முறையில் சீரமைக்கலாம் என்று பார்க்கிறோமே தவிர நீண்ட நெடுங்காலத் திட்டமாக அமைத்து அவை களை செயல்படுத்த முற்படவேண்டும். அதற்கானத் திட்டங்களை முதன் முதலாகச் செய்யவேண்டியது மிக மிக அவசியம்.

அப்படிப் பொதுவாக நமது நகரத்தை—சென்னை நகரத்தைப் பொறுத்த 12-00 noon
மட்டில்கூட அப்படித் திட்டமிடப்படுவதில்லை யென்பதுதான் என் போன்ற வர்கள் அபிப்பிராயம். மருத்துவ வசதியை எடுத்துக்கொண்டால் நம்

சென்னையைப் பொறுத்த மட்டில் ஏற்கனவே இருக்கக்கூடிய ஆஸ்பத்திரிகளைத்தான் நெருக்கடியாகச் செய்து வருகிறார்களே தவிர, ஒரு மாஸ்டர் ப்ளான் போட்டு இனி கட்டுகின்ற ஆஸ்பத்திரிக் கட்டிடங்களை நகரத்திற்கு வெளியே சுகாதார வசதியுள்ள இடத்தில் கட்டுவதற்குத் திட்டமிடப்பட வேண்டும். நகரத்திற்கு 10, 15 மைலுக்கு வெளியே சுகாதார வசதி உள்ள இடங்களில் ஆஸ்பத்திரியைக் கட்டினால் நகரத்தில் இருக்கக்கூடிய நெருக்கடியைக்கூடக் குறைக்க முடியும். ஆகவே நாம் போடக்கூடிய திட்டங்கள் வெறுமனே வீடுகள் கட்டுவதற்கு மட்டும் என்றால் அது போதாது. இதர துறைகளிலும் அபிவிருத்தி அடையும் வகையில் முற்போக்கானத் திட்டங்களை "லாங் ரேஞ்சு வ்யூ"-வை மனதில் வைத்துத் திட்டமிட வேண்டும்.

அடுத்தபடியாக, குறிப்பிட விரும்புவது, இந்தச் சட்டம் அமுலாகக் கூடிய காலத்திலே இது பற்றிப் பொதுவாக நாட்டு மக்களிடையே இருக்கக் கூடிய குறை "வீடு கட்டும் ஹவுஸிங் ஸ்கீமில் விலை மிக மிகக் கூடுதலாகி விடுகிறது" என்பதாகும். இதை நிர்வாகம் செய்யக்கூடிய மெஷினரி செலவு செய்யக்கூடிய எஸ்டாப்ளிஷ்மெண்ட் சார்ஜஸ் அதிகமாக இருக்கிறது என்று மந்திரியவர்கள் கேள்வி நேரத்தில் குறிப்பிட்டார்கள். அதை எந்த அளவுக்குச் சுருக்க முடியும் என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டும். இப்படி ஒரு தனி போர்டு என்று ஆக்கிவிட்டு சாதாரணமாகத் தனியார் துறையில் தனிப்பட கட்டுகிற வீட்டுக்குப் பதினாயிரம் ரூபாய் ஆனால், இவர்களால் கட்டப்படுகிற வீட்டுக்கு இருபதாயிரம் ரூபாய் ஆகிவிடுகிறது. ஆகவே, நிர்வாக இயந்திரத்தை செம்மையாகவும், சீராகவும் செய்ய வேண்டுமென்ற கருத்தைக் கொண்டிருக்க வேண்டுமென்று கோரி நான் இந்த மசோதாவை வரவேற்கிறேன்.

*Sri K. ANBAZHAGAN : சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, மாநில முழுவதற்கும் வீடுகள் கட்டுவதற்கான ஒரு நிர்வாக ஆய்வுக் குழுவினை ஏற்படுத்துவதற்காகக் கொண்டு வரப்பட்டிருக்கிற இந்த மசோதாவின் நோக்கத்தை நான் வரவேற்கிறேன். இந்த நோக்கம் நல்ல வகையிலே நிறைவேற வேண்டுமானால் மற்றும் பல துணைக் கடமைகளையும் நிறைவேற்றியாக வேண்டுமென்பதை நினைவூட்டுகிறேன்.

வீடுகள் கட்டுவது என்ற திட்டமானது, வீடுகளை ஓரளவு எண்ணிக்கையிலே அதிகமான அளவு கட்டி முடித்து விடுவதனாலேயே மட்டும் குடியிருப்பு வசதிப் பிரச்னையை நிறைவேற்றிவிட முடியாது. பொது மக்களுக்கு வீடுகள் மிகுதியாகத் தேவைப்படுகின்றன என்பதும், மக்கள் எண்ணிக்கை நாளடைவில் பெருகி வருவதால் வீடுகள் தேவை பெருகி வருகிறது என்பதும், அமைச்சர் அவர்கள் தெரிவித்தபடி சேர்ந்து வாழும் குடும்பங்கள் பிரிந்து வாழமுற்படுவதால் அதிகமான அளவு வீடுகள் தேவைப்படுகின்றன என்பதுமே வீடுகள் அதிகமான அளவில் கட்டப்பட வேண்டுமென்பதற்குக் காரணங்களாகும்.

ஆனால், மக்களுக்கு வீடுகள் தேவையென்று சொன்னாலும், வீடுகள் மட்டுமே எண்ணிக்கையில் பெருகிவிட்டால் மட்டும் அந்தக் குறை நிவர்த்தியாகி விடுமா என்று பார்க்கும்போது, அந்தக் குறை நீங்கிவிடாது என்பது தெளிவாகத் தெரிகிறது. எனவேதான் இது குறித்துப் பல்வேறு வகையான சூழ்நிலையையும் ஆராய்ந்து ஆலோசனை கூற இந்த நிர்வாகத் துறையில் பல்வேறு துறையில் உள்ள நிபுணர்களும் இடம் பெறவேண்டுமென்று கருதுகிறோம். எனினும் அந்தக் குறையை எந்த விதத்தில் நீக்க வேண்டும், எந்த அளவுக்கு நகர வாழ்க்கையில் உள்ள இட நெருக்கடியைப் போக்க வேண்டுமென்று திட்டம் போட்டாலும்கூட அதை நிவர்த்திக்க இப்போது இருக்கக்கூடிய அதிகாரம் போதுமானதாக இருக்காது என்பது என் எண்ணம்.

இந்தக்குழு எத்தனை வீடுகளைக் கட்டலாம், எவ்வளவு பணத்தை ஒதுக்கலாம், எந்தெந்த வட்டாரத்தில் கட்டவேண்டும் என்பதைத்தான் ஆலோசிக்க முடியுமே தவிர, இன்றைய தினம் இருக்கும் நகர வாழ்க்கையில்,

9th September 1960] [Sri K. Anbazhakan]

மேலும் மேலும் மக்கள் எண்ணிக்கை, மிக வேகமாகப் பெருகி வருவதைத் தடுக்க இந்தக் குழுவிற்கு அதிகாரம் இல்லை. உண்மையிலேயே புதிய வீடுகள் கட்டுவதோடு மட்டுமல்லாமல், நகரத்தில் நாளுக்கு நாள் பெருகி வரும் மக்கள் எண்ணிக்கையைத் தடுக்காவிட்டால், இந்தக் குடியிருப்புக் குறையை நீக்குவது முடியாது போகும். இந்த வகையில் ஆலோசனை கூறவும் அந்தக் குழுவிற்கு அதிகாரம் இருக்கவேண்டும்.

சென்னை நகரை எடுத்துக் கொண்டால் ஏறத்தாழ 25 ஆண்டுகளுக்கு முன்பு $6\frac{1}{2}$ லட்சம் மக்கட்கே உரிய வசதிகள் செய்யப்பட்டுள்ள போதிலும், இன்றையதினம் 18,19 லட்சம் மக்களைத் தாங்கிக்கொண்டிருக்கிறது. வீட்டு வசதிக் குறைவு, சுகாதார வசதிக் குறைவு, முதலான பல துறைகளில் மக்கள் பல இன்னல்களுக்கு ஆளாகிறார்கள். போக்குவரத்தில் கூட எவ்வளவுதான் வசதிகள் செய்து கொடுத்த போதிலும்கூட, நெருக்கடி அதிகமாகத்தான் இருக்கிறது. வீடு கட்டும் திட்டத்தைப் பற்றி ஆலோசிப்பவர்கள் நகரத்தில் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் மக்களின் எண்ணிக்கைப் பெருக்கத்தை மேலும் ஏற்பட விடாமல் தடுப்பதற்கான ஆலோசனைகளையும் செய்யவேண்டும். பெரிய நகரத்தைச் சுற்றிப் பத்து மைல் அளவில் வேலி போட வேண்டும். அந்த வேலி மக்கள் வராமல் போகாமல் செய்யும் வேலி அல்ல. நகரத்தைச் சுற்றி அந்த எல்லை வரையில் புதுத் தொழிற்சாலைகளை உண்டாக்க அனுமதிக்கக் கூடாது.

**THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்—15 மைலுக்கு அப்பால்தான் புதுத் தொழில்களை ஆரம்பிக்க வேண்டுமென்று உத்தரவு போட்டிருக்கிறோம்.

**SRI K. ANBAZHAGAN** : அமைச்சர் அவர்கள் 15 மைல் வரையில் புதுத் தொழில்களை ஆரம்பிக்கக் கூடாது என்று உத்தரவு போட்டிருப்பதாகத் தெரிவிக்கிறார். ஆனால் இன்றைய தினம் சென்னை நகரத்தில் இருந்து 8, 10 மைல் தூரத்தில் உள்ள ஆவடியில் பல தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டு வருகின்றன. நான் புதிய தொழில்கள் உண்டாக வேண்டுமென்பதில் விருப்பம் உடையவன்தான். இருந்தாலும் நகரத்தில் இருந்து 10 மைல்களுக்குள்ளாக இருக்கும் இடங்களில் தொழிற்சாலைகளை ஆரம்பித்தால் நகரத்தில் இருக்கும் வசதியைப் பயன்படுத்திக் கொள்ளும் விருப்பத்தில், நகரத்தில் இருந்து கொண்டே வெளியிலே இருக்கும் தொழிற்சாலைக்குப் போய்வர மக்கள் விரும்புகிறார்கள். அதனால்தான் மக்கள் நெருக்கடியான பகுதிகளில் சாக்கடைக்குப் பக்கத்தில் வசித்தாலும் கூட நகரத்திலேயே தங்க ஆசைப்படுகிறார்கள். எனவே, இனி ஆரம்பிக்கப்படக்கூடிய தொழிற்சாலைகளையேனும் நகரத்திற்கு வெளியே 15 மைல்களுக்கு அப்பால் ஆரம்பிக்க வேண்டும். அப்படி ஆரம்பிக்கப்படுகிற தொழிற்சாலைகளில் சென்னையில் உள்ள சேரிகளில் வாழும் மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இந்தச் சேரியில் உள்ள மக்களுக்கு, நிரந்தரமான வேலை 20 மைல்களுக்கு அப்பால் உள்ள இடங்களில் கிடைக்கும் போது, அங்கே குடி போகவும் அவர்கள் தயாராக இருப்பார்கள். அங்கே அவர்களுக்கு வீடு கட்டிக் கொள்ள பணம் கொடுக்காவிட்டாலும், குடியிருப்பு மனைக்கு வேண்டிய நிலமாவது அவர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

நகரத்தில் பல பங்களாக்களை சுற்றியுள்ள நிலங்களை அரசினர் கைக்கொள்ளவேண்டுமென்று சொன்னால், அதன் உரிமையாளரான நிலம் படைத்த பலர் சம்மதிப்பது இல்லையென்று அமைச்சர் தெரிவித்தார்கள். நிலச் சொந்தக்காரர்களுக்கு விருப்பம் இல்லையென்பதற்காக அவற்றை விட்டுவிடுவது என்பது, சமுதாயத்தில் சமதர்ம தத்துவத்தை மேற்கொண்டு செயலாற்றுகிறோம் என்ற வாதத்திற்கு மாறானதாகும். நில உச்ச வரம்பு கட்ட முன்வருகிறோம் என்று கூறும்போது கிராமங்களில் இத்தனை ஏக்கர்தான் ஒருவர் வைத்துக்கொள்ளவேண்டுமென்று சொல்லிவிட்டு, நகரத்தில் சிலரது வீட்டைச் சுற்றி பூங்காவைப் போன்று இருக்கக் கூடிய காலி இடத்தில் ஏன் ஏழை மக்களுக்காக வீடுகள் கட்டிக்கொடுக்கக் கூடாது? இந்த நிலைமை நீடிக்குமானால் நகரத்தில் உள்ள நடுத்தர மக்களும், ஏழை மக்களும் வீட்டு மனைகூட இன்றி

பெரிதும் பாதிக்கப்படுவார்கள். இன்றைய தினம் மனை நிலம் விற்கும் விலையானது நகரத்தில் இருக்கும் நடுத்தர மக்களாலும், ஏழை மக்களாலும் விலைக்கு வாங்க எண்ணிக்கூடப் பார்க்க முடியாத அளவில் இருக்கிறது. அரசாங்கம் அதைக் கவனித்து குறைந்த விலையில் அவர்களுக்கு நிலம் கிடைப்பதற்கு வழி செய்து கொடுக்க வேண்டும்.

சி. ஐ. டி. பணியாற்றும் முறையில் தேவையான முன்னேற்றம் ஏற்படவில்லை. அவர்கள் கட்டியிருக்கின்ற வீடுகளைக் கண்ணாரக் காண்கிறோம். வீடுகள் கட்டப்பட்டிருப்பதால் எந்த அளவுக்கு மகிழ்ச்சி ஏற்பட வேண்டுமோ அந்த மகிழ்ச்சி மக்களுக்கு ஏற்படவில்லை. அவர்கள் மனை நிலத்திற்கு வாங்கும் விலையானது அதிகமாக இருக்கிறதென்று பலரும் வருத்தப்படுகிறார்கள். தனிப்பட்டவர்களிடமிருந்து நிலத்தை வாங்கும்போது அதன் விலை அதிகமாக இருக்கிறதென்று சொன்னால், அரசாங்கம் சட்டதிட்டத்தை மாற்றி குறைந்த விலையில் நிலத்தை வாங்கி நடுத்தர மக்களுக்கும், கடைநிலை மக்களுக்கும் வசதி செய்து கொடுக்க வேண்டும். இதைப்போன்று எத்தனை திட்டங்களைப் போட்டாலும் குடியிருப்பு வசதி தேவைக்கு உண்மையான பரிகாரம் நகரங்களிலுள்ள மக்கள் தொகையைக் கட்டுப்படுத்துவது தான். சென்னை நகரில் 20 லட்சம் மக்கள் இருக்கிறார்கள். வேறு சில நகரங்களில் 4, 5 லட்சம் மக்கள் இருக்கிறார்கள். ஐந்து லட்சம் மக்கள் இருக்கக்கூடிய பெரிய நகரங்களில் எல்லாம் புதிய தொழிற்சாலைகளை ஆரம்பிக்க வேண்டுமென்றால் அதன் எல்லையில் இருந்து 10 மைல் தள்ளியும், பொதுவாக நகர எல்லைக்கு வெளியிலேயும் ஆரம்பிக்கச்செய்ய வேண்டும். அப்போதுதான் இந்தப் பிரச்னையை ஓரளவு தீர்க்க முடியும்.

மேலும், தமிழ் மாநிலத்தைப் பொறுத்த வரையில் இப்பொழுது தான் தொழில் வளர்ச்சி சிறிது ஏற்படுகிறது; ஏற்படுகிற தொழில் வளர்ச்சியை நாம் ஒழுங்குபடுத்துவோமானால் பயன் ஏற்படும். இப்பொழுது ஒரு தொழில்பேட்டை கிண்டியில் இருக்கிறது. இன்னொரு தொழில் பேட்டை ஆவடியில் ஏற்படுத்த இருப்பதாக அமைச்சர் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். தொழில்பேட்டை அமைப்பதைப் பொறுத்தவரையில் எனக்கு மகிழ்ச்சிதான். ஆனால், தொழில்பேட்டையை ஆவடியைவிட்டுச் சற்று தள்ளி அமைக்க முடியுமா என்று அமைச்சர் அவர்கள் ஆலோசிக்க வேண்டும். ஆவடி என்றால் சென்னையிலிருந்து காலையில் சோற்றுக் காவடி எடுத்துப் புறப்பட்டுப்போய் மாலையில் திரும்பிவிடலாம் என்று பலரும் தீர்மானித்துக் கொள்வதால், திரும்பவும் சென்னையில் மக்கள் தொகை பெருக்கத்தால் நெருக்கடி ஏற்படும். தொழில்பேட்டைகளையும், பெரிய தொழில் நிலையங்களையும் சற்றுத் தொலைவாகவே தொடங்குவதற்கு ஏதாவது வழிமுறை காணவேண்டும்.

அடுத்து, இந்த ஆய்வுக் குழுவின் திட்டத்தின் மூலமாக வீடு கட்டித் தருவது என்பதில் காட்டப்படும் கவனத்தைவிட முக்கியமாக வீடுகட்டுவதற்கான நிலத்தைத் தேடித் தருவதிலேதான் கவனம் செலுத்த வேண்டும். உண்மையிலேயே, ஏழை குடிசைவாழ் மக்கள் அவர்களாகவே குடிசை போட்டுக் கொள்ளத் தயாராகயிருக்கிறார்கள். அத்தகைய குடிசை கட்டிக்கொள்ளும் ஏழை மக்களுக்குத் தேவையான இட வசதியை உண்டாக்கித் தர வேண்டும். முதலிலே மனைக்கு இடம் தேடித் தருவது, இந்த வீடுகட்டும் திட்டத்தைத் தயாரிப்பதற்கு அமைக்கப்படுகிற நிர்வாகக் குழுவினுடைய முதல் கடமையாக இருக்க வேண்டும்.

இரண்டாவது கடமை, ஏழைகளுக்கு வீடு கட்டித் தருவது. அதை எவ்வளவு சிக்கனமாகக் கட்டித்தர முடியும் என்பதைப்பற்றி அமைச்சர் அவர்கள் இந்தக் குழுவின் மூலமாக ஆலோசிக்க வேண்டும். இன்றைய தினம் கட்டப்படும் பலவகையான வீடுகள் ஏழைகளுக்குத் திருப்தி அளிப்பதாக இல்லை என்பதை ஏற்கனவே கட்டப்பட்ட திரு வி. க. காலனி, சர்மா காலனி இவைகளைப் பார்த்த காரணத்தால் சொல்கிறேன். ஆதித் திராவிட மக்களுக்கு, ஹரிஜன மக்களுக்குப் பல இடங்களில் கட்டித் தரப்பட்டிருக்கும் குடியிருப்புகளை—காலனிகளை நான் பார்த்திருக்கிறேன்.

9th September 1960] [Sri K. Anbazhagan]

அங்கே குடிசெல்லும் மக்கள் தரையில் கால் வைக்க முடியவில்லை, சுவரில் கை வைக்க முடியவில்லை. நான் பார்த்தது ஏறத்தாழ ஏழு எட்டு இடங்கள் இருக்கும். தேவக் கோட்டை பக்கத்தில் ஒரு சிற்றூர், பழனி பக்கத்திலே ஒரு ஊர், ஈரோட்டுக்குப் பக்கத்திலே ஒரு இடம்—இப்படிப் பல இடங்களில் குறை நேர்ந்துள்ளது. அப்படி வசதிக் குறைவாகக் கட்டிய பிறகு, மக்கள் குடியிருக்க முடியாத நிலைமை ஏற்படாத வண்ணம், அதே நேரத்தில் சிக்கனத்தோடு, இடையிலுள்ள தரகர்கள் சம்பாதிக்காத வகையில் வீடு கட்டும் திட்டத்தை நிறைவேற்ற வேண்டும். அரசாங்கத்தில் ஏராளமான பணம் இல்லை ; கேட்டாலும் கொடுக்க டில்லி சர்க்காரும் தாராளமாக முன் வரவில்லை. இங்கே நகரத்தில் இடத்திற்குப் பஞ்சம் ; கட்டுவதோ சின்னச் சின்ன வீடு; கட்டுவதிலும் தரகர்கள் சம்பாதிக்கக் கூடிய முறை, இப்படிப்பட்ட ஒரு நிலை நீடிக்குமானால் இது எதற்காகவோ ஆரம்பித்து எங்கோ போய் முடிந்த திட்டமாக முடிந்து விடும். எனவே, இந்த ஆய்வுக் குழு நிச்சயமாக அரசாங்கத்தினுடைய நேரடி மேற்பார்வையில் வீடுகள் கட்டும் அளவுக்கு இந்த முயற்சியிலே ஈடுபடவேண்டும். அதற்கான வீடுகட்டும் யூனிட்டுகள் ஏற்படுத்தப்படும் என்று அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். எந்த இடத்தில் கட்டுவதாக இருந்தாலும் அதன் நிர்வாகத்தில் அரசாங்கம் பொறுப்பு எடுத்து, அதிலே ஏற்படும் தீமைகளைக் களையக் கூடிய முறையில் ஏழைகளுக்குப் பயன்படும் விதத்தில், மாதா மாதம் அவர்கள் செலுத்தும் வாடகை தொகை குறையும் முறையில், சொந்தமாக்குவதாக இருந்தாலும் அதிக வட்டி செலுத்தத் தேவைப்படாத முறையில், இதற்குப் போடப்பட்ட மூலதனத்தைப் பெரிதென கணக்குக் காட்டாத முறையில், கட்டித்தர வேண்டும். அந்த அடிப்படையான நோக்கத்தை நிறைவேற்றும் வழி முறையை எண்ணி அமைச்சர் அவர்கள் இந்தக் குழுவினுடைய நடைமுறையை அமைத்துக் கொடுக்க வேண்டும்.

இந்த மசோதாவைப் பொறுக்குக் குழுவுக்கு விட்டிருக்கிறார்கள். எனவே, அதிலே பல ஆலோசனைகள், இந்த ஆய்வுக்குழுவினர் எப்படி எப்படி நியமிக்கப்படுவது என்பது பற்றிக் கூறப்படும். நிபுணர்கள் பலர் இதில் இடம் பெறவேண்டும். உத்தியோகச் சார்புடையோர் இருக்க வேண்டும என்பதையும் நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால் உத்தியோகப் பற்றில்லாதவர்கள் என்று கூறப்படும் பொது மக்களுடைய பிரதிநிதிகளாக இருப்பவர்கள் எண்ணிக்கையில் சற்று அதிகமாக இருந்தால்தான் இக் குழுவில் பொது மக்களின் கஷ்ட நஷ்டங்களை எடுத்துக் கூறி பிரதிபலிக்கச் செய்ய வாய்ப்பு ஏற்படும். எனவே இதில் சட்ட மன்றத்தினருக்கு முக்கியமாக இடம் இருக்க வேண்டும். சட்ட மன்றத்தினுடைய எம்.எல்.ஏ.க்கள் குறைந்தது எட்டு பேர், பத்து பேராவது இருக்கும்படி இந்த நிர்வாகக் குழு திருத்தியமைக்கப்படுமானால் அது வரவேற்கத் தக்கதாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்வதுடன் இதன் நோக்கத்தை வரவேற்கிறேன். மேலும் இதில் ஏற்படக்கூடிய குறைபாட்டைக் களையக் கூடிய வழி முறைகளை ஆலோசித்து இந்த மசோதாவை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன். வணக்கம்.

**SRIMATHI T. N. ANANDANAYAKI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஹௌசிங் போர்டு மசோதா இப்பொழுது சென்னையினுடைய மக்கள் தொகை மிகவும் வேகமாக அதிகரித்துக் கொண்டு போவதினாலே மிக அவசியமாக்கப்பட்டு, கொண்டு வந்திருப்பது வரவேற்கத்தக்கது. இதுவரை ஸிட்டி இம்ப்ரூவ்மெண்ட் ட்ரஸ்ட் இவ்வேலையை ஓரளவு பார்த்து வந்தது. அது போதாது, மாகாணம் பூராவும் இப்படிப் பட்ட அதிகாரம் கொடுத்து போர்டு அமைத்தால் இந்தப் பிரச்னையை ஓரளவு தீர்க்கலாம் என்ற நல்லெண்ணத்தோடு கொண்டுவந்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது.

இதற்கென்று ஒரு குழுவை அமைத்திருக்கிறார்கள். அதிலே அதிகாரிகள் அதிகமாக இருந்து, நான்கு "நான்–அபிஷியல்" மெம்பர்கள் இடம் பெறுவார்கள். கனம் அமைச்சர் அவர்கள் அதற்கு விளக்கம் கொடுக்கும்

[Srimathi T. N. Anandanayaki] [9th September 1960

போது, "இது அட்வைஸரி போர்டு அல்ல; நிர்வாகத் துறையிலே ஈடுபட்டிருப்பதால் ஆபீசர்கள் இருக்கத்தான்வேண்டும். அப்பொழுதுதான் நிர்வாகத்திற்கு வசதியாக இருக்கும்" என்று கூறியிருக்கிறார்கள். அதை நாம் ஓரளவு ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். காரணம், 14 அதிகாரிகளோடு 4 நானபிஷியல் மெம்பர்களும் இருப்பார்கள் என்று சொல்லப்படுகிறது. அந்த நான்கு நானபிஷியல் மெம்பர்களில் ஒருவர் இன்ஜினீயராகவோ, ஆர்க்கிடெக்டாகவோ இருக்கவேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆக மூன்று ஸ்தானங்கள்தான் நானபிஷியல் மெம்பர்களுக்குக் கொடுக்கப்படுகின்றன. ஆனால், குடியிருப்புப் பிரச்னை என்பது மக்களுடைய அன்றாடப் பிரச்னைகளில் ஒன்றாக இருப்பதால், நானபிஷியல் மெம்பர்களின் எண்ணிக்கையைச் சற்று அதிகரித்தால் பரவாயில்லை என்று தான் நான் எண்ணுகிறேன். பதினான்கு அதிகாரிகளோடு, குறிப்பாக எங்கெங்கு இந்தப் பிரச்னை மிக நெருக்கடியாக இருக்கிறதோ அந்தப் பகுதிகளில் பிரதிநிதித்துவம் வகிக்கும் சட்டசபை அங்கத்தினர்களுக்கும் இந்த போர்டில் இடம் கொடுத்தால் மிக வரவேற்கத்தக்கதாக இருக்கும். நெருக்கடியுள்ள பகுதியிலிருந்து வரும் பிரதிநிதிகளுக்கு இந்த போர்டில் இடம் கொடுப்பது அந்தப் பகுதி மக்களுக்குப் பலன் ஏற்பட வகை செய்யும் என்று நினைக்கிறேன். அந்த முறையிலே இதை ஏற்றுக் கொள்வது மிகவும் வரவேற்கத்தக்கது.

இதிலே ஒரு சின்ன பிரச்னை என்னவென்றால், இப்படி அவர்கள் நிலத்தை வாங்கும்போது விலை அதிகமாக ஏறிவிடுகிறது. அது என் ஏறுகிறது என்று கேட்டால், ஒருவரும் அதற்குக் காரணம் சொல்ல முடியாது. வி.ஐ.டி நிலத்தை அக்வையர் பண்ணும் போது க்ரௌண்டு ஒன்றை ஆயிரம் முதல் ஆயிரத்து ஐநூறு ரூபாய் வரையில் விலை கொடுத்து வாங்குகிறார்கள். அதே சமயத்தில் அதை மக்களுக்கு விற்கும் போது கிரௌன்ட் ஒன்றை 3,500 ரூபாய் முதல் 4,000 ரூபாய் வரையில் விலைக்குக் கொடுக்கிறார்கள், சென்னை நகரத்தில். இது என் இரட்டை மடங்கு ஆகி விடுகிறது? நகராண்மைக்கழகம், இப்படி அக்வையர் செய்யப் பட்ட இடங்களில் வசதி தருகிறார்கள். ட்ரெயினேஜ் வசதி, விளக்கு வசதி என்று வசதிகள் செய்து தருவதால் அவர்கள் பெட்டர்மென்ட் வரி வாங்குகிறார்கள். இதனால் இரட்டை பங்கு விலை வைக்கவேண்டி ஏற்படுகிறது. இந்த இரட்டை பங்கு விலை யார் தலையில் போகிறது என்று பார்த்தால், பண வசதி இல்லாமல் ஆர்வத்தோடு போய் வாங்குகிறார் களே அவர்கள் தலையில்தான் போகிறது. அவர்கள் என் இதற்கு முன் வருகிறார்கள் என்றால், அவர்களுக்கு மொத்தப்பணமும் கொடுத்து வாங்க வசதி கிடையாது; இன்ஸ்டால்மென்ட்டில் கட்டலாம் என்ற வசதியை வி.ஐ.டி. செய்து கொடுக்கிறது. அதனால் அவர்கள் முன்வந்து வாங்கு கிறார்கள்; இரட்டைச் செலவையும் தலையில் சுமத்திக் கொள்ளுகிறார்கள். ஆகவே, விலை ஏற்றத்தைப் பொறுத்த வரையில் தவறு எங்கோ இருக் கிறது என்பதை ஒத்துக்கொள்ள வேண்டும். வி.ஐ.டி. யானது லாண்டு அக்விஸிஷன் செய்கிறார்கள். கார்ப்பரேஷன் எஸ்டிமேட் கொடுக்கும் போது எக்கச்சக்கமாகப் போடுகிறார்களோ, என்னவோ தெரியாது. அதை யும் சற்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். இதையெல்லாம் சேர்த்து யார் தலையில் வைக்கிறோம் என்றால், வாங்குகிறவர்கள் தலையில் வைக்கிறோம்.

குறிப்பாக ஒன்று சொல்கிறேன். ஒரு இடத்தில் பாலம் கட்ட வேண்டி யிருக்கிறதென்றால், அந்தப் பாலம் கட்டுவதற்கான செலவெல்லாம் நிலத்தை வாங்குகிறவர்கள் தலையில் போகிறது. இப்படியாக நிலத்தின் விலை மிக அதிகமாக ஏறிவிடுகிறது. அதே சமயத்தில், அக்வையர் பண்ணும் இடத்திற்குப் பக்கத்தில் சில நிலங்கள் இருக்கின்றன. அங்கு வி.ஐ.டி.காலனியோ, ஹௌஸிங் போர்டு காலனியோ வராமலிருந்தால் அதன் விலை க்ரௌண்டுக்கு ரூ. 200 முதல் ரூ. 300-க்கு மேல் இல்லாமல் இருக்கும். ஆனால், இப்படி அக்வையர் செய்வதால், பக்கத்தில் உள்ள நிலங்களின் விலை அதிகமாகிறது. க்ரௌண்டு ஒன்று ரூ. 5,000-க்கும் விற்க முடிகிறது. காலனிக்கு எல்லா வசதியும் நாம் கொண்டு வந்து

9th September 1960] [Srimathi T. N. Anandanayaki]

விடுகிறோம். காலனிக்குப் பக்கத்தில் இருக்கும் நிலம் எந்தச் செலவும் இல்லாமல் பத்து மடங்கு விலை உயர்ந்துவிடுகிறது. அதுவும் வாங்கு கிறவர்கள் தலையில் சுமத்தப்படுகிறது. ஆகவே, இப்படி காலனிகள் ஏற் படுத்தும்போது, அந்தக் காலனியில் உள்ளவர்கள் தலையிலேயே எல்லாச் செலவையும் போடாமல், அதில் ஒரு பகுதியை பக்கத்தில் அபிவிருத்தி யாகப்போகும் மற்ற நிலங்களில் உள்ளவர்களும் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்யவேண்டும். பெட்டர்மெண்ட் வரிப்பளுவை காலனிக்குப் பக்கத்தில் உள்ளவர்களும் ஒருபங்கு ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றால், வாங்குகிறவர் களுக்கு ஓரளவு பளு குறைவாக இருக்கும். எப்படியும் பெட்டர்மெண்ட் வரி கட்டித்தானே ஆக வேண்டும்? தனியாக லே-அவுட் போட்டு பெட்டர் மெண்ட் வரி கட்டுகிறார்கள். நம்முடைய காலனிக்குப் பக்கத்தில் இருப்ப தால் அவர்களுக்கு இந்த வசதிகள் செலவு இல்லாமலேயே கிடைத்து விடுகின்றன. ஆகவே, அவர்களிடமிருந்து ஓரளவு சராசரி அளவு பெட்டர் மெண்ட் வரி வாங்கினால், பொதுவாகவே வாங்குகிறவர்களுடைய பளு குறையும் என்று நினைக்கிறேன். ஒருவருக்கு பெட்டர்மெண்ட் ரேட் அதிக மாக இருக்கிறது. ஒருவருக்கு ஒன்றுமே இல்லாமல் லாபம் வருகிறது. கனம் அமைச்சர் அவர்கள் இந்த நிலையை மாற்றியமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இவ்வித காலனிகளுக்கு வசதி நாம் கொண்டு வருவதன் காரணமாக, பக்கத்தில் உள்ளவர்களுக்கு 'ஆடோ மாடிக்'காக வசதி கிடைக்கிறது. அந்த வசதி கிடைத்து அவர்கள் நிலத்தின் விலை பத்து மடங்கு ஆகிறது. அதிலே ஒரு மடங்கோ இரண்டு மடங்கோ பெட்டர்மெண்ட் வரியாகக் கொடுக்கச் சொல்வதிலே தவறு இல்லை. அப்படி அவர்களிடமிருந்தும் பெட்டர்மெண்ட் வரியில் ஒரு பங்கு வாங்கப்பட்டால், காலனிகளில் நிலம் வாங்குகிறவர்களுக்கு ஓரளவு பளு குறையும். மிடில்-க்ளாஸ், லோயர் மிடில்-க்ளாஸ் மக்கள் தான் காலனி களில் குடியேறுகிறார்கள். பணக்காரர்கள் வருவதில்லை. காரணம், அவர் களிடம் பணம் ரொக்கமாக இருக்கும். இதைவிட விலை குறைவாக நிலம் கிடைக்கிறதா என்று சின்ன சின்ன மீன்களையெல்லாம் விட்டுவிட்டு பெரிய மீன் வரும் வரை காத்துக்கொண்டிருந்து கொத்தித்தின்னுவது போல—பார்த்துக்கொண்டிருந்து, பணத்தைக் கொடுத்து, உடனே வாங்கி விடுவார்கள். ஆனால், சாதாரண ஏழை மக்கள் பணத்தை கையில் வைத்துக் கொண்டு இப்படி செய்ய முடியாது. ஆகையினால், அமைச்சர் அவர்கள் இந்த "ஹௌஸிங் போர்டு ரெகுலேஷன்ஸ்" போடும்போது இதையும் கவனத்தில் வைத்துக்கொண்டு, பக்கத்தில் இருக்கக் கூடிய நிலக்காரர்களுக்கும் கொஞ்சம் இந்தத் தொல்லையில் பங்கு கொடுக்க வேண்டும். அம்மாதிரி செய்தால் ஏழை மக்களுக்கு நலமாக இருக்கும்.

குறிப்பாக ரூ. 12, 15 வாடகை உள்ள வீடுகள் அதிகமாக தேவை யாக இருக்கிறது. "லோ இன்கம் குரூப்" என்று சொல்லக்கூடியவர்கள் 70, 80 ரூபாய் வாடகை கொடுக்க முடியாது. "மிடில் இன்கம் குரூப்" மக்களே ரூ. 70 வாடகை கொடுப்பதற்கு திணற வேண்டியிருக்கிறது. "லோ இன்கம் குரூப்" மக்களுக்கு அவ்வளவு வாடகை கொடுப்பதற்கு கட்டிவராது. உண்மையிலேயே "லோ இன்கம் குரூப்" மக்களுக்கு பயன் படவேண்டுமானால் ரூ. 12, 15, 17 வாடகை உள்ள வீடுகளை அதிக மாகக் கட்டவேண்டும். அப்பொழுதுதான் வீட்டு நெருக்கடியை ஓரளவுக்கு சமாளிக்க முடியும். ரூ. 70, 150 வாடகை உள்ள வீடுகளை கட்டினால் அதெல்லாம் ஓரளவுக்கு "அப்பர் மிடில் கிளாஸுக்கும் மிடில் கிளாஸுக் கும்" மத்தியிலே உள்ள மக்களுக்குத்தான் வசதி செய்து கொடுக்கக் கூடியதாக இருக்கும். ஆகவே, லோ இன்கம் குரூப் மக்களுக்கு கட்டாயம் இது மாதிரி குறைந்த வாடகையில் உள்ள வீடுகளை அதிகமாகக் கட்டிக் கொடுத்து வசதி செய்து கொடுக்க வேண்டும் என்பதில் கவனம் செலுத்தி, இந்தக் குழு இதையெல்லாம் ஆராய்ந்து வீடு கட்டும் பிரச்னையை ஏற்றுக் கொள்வார்களேயானால் மிகவும் வரவேற்கத்தக்கதாக இருக்கும்.

நான் இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். இன்று தெற்கு தான் வளர்கிறது, வடக்கும் மேற்கும் தேய்ந்து கொண்டே போகிறது, சென்னை நகரத்தைப் பொறுத்தவரைக்கும். எதிர்க்கட்சிக்காரர்கள் வடக்கு வாழ்

கிறது, தெற்கு தேய்கிறது என்று சொன்னாலும், இங்கே தெற்கு வாழ் கிறது. வடக்கு தேய்கிறது. இனிமேல் காலனி ஏற்படுத்தினால் வடக்கிலும் மேற்கிலும் ஏற்படுத்தவேண்டும். இனிமேல் வரும் காலனிகளை "வெஸ்டு மதரூஸ், நார்த் மதரூஸ்" தான் ஏற்படுத்தவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் தனியாக ஒரு உத்தரவு போடவேண்டுமென்று மிகவும் தாழ்மையோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Sri S. M. ANNAMALAI** : சட்ட மன்ற துணைத் தலைவர் அவர்களே, இந்த ஹௌஸிங் போர்டு மத்திய சர்க்கார் வற்புறுத்தலின் பேரில்தான் ஏற்படுத்தப்படுகிறது. இதற்காக தனியாக ஒரு போர்டு நியமிக்க வேண்டும் என்று மத்திய சர்க்கார் வற்புறுத்தியிருக்கிறார்கள். "ஸ்டேட்மெண்டு ஆப் ஆப்ஜக்ட்ஸ் அண்டு ரீஸன்ஸில்" "ஸ்ட்ரெஸ்டு" என்று சொல்லப் பட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் வற்புறுத்தியதினாலேதான் இந்த போர்டு ஏற்படுத்தப்படுகிறது. இப்படி "போர்டு, போர்டு" என்று ஒவ்வொரு இலாகாவையும் தனியாகப் பிரித்துவிட்டால், உண்மையில் சட்ட மன்றத் திற்கு வேண்டிய அதிகாரங்கள் இல்லாமலே போய்விடுகிறது. மின்சார இலாகா முதலில் சர்க்கார் கையில் இருந்தது. இப்பொழுது மின்சார போர்டு ஏற்படுத்தப்பட்டுவிட்டது. அந்த போர்டு நியமிக்கப்பட்ட பிறகு, அதிலே சில தவறுகள் ஏற்பட்டாலும் அதைப்பற்றி கேட்பதற்குக்கூட சட்ட மன்றத்திற்கு உரிமை இல்லாமல் போய் விடுகிறது. முக்கியமான இலாகாக்களுக்கு இப்படி போர்டுகளை நியமித்து, அவைகளை தனியாக பிரித்துவிட்டால், சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அந்த இலாகாவைப்பற்றி கேள்வி கேட்பதற்கோ அல்லது அங்கே நடக்கும் தவறுகளை எடுத்துக்கூறி திருத்துவதற்கோ உண்மையிலே சக்தி இல்லாமல், உரிமை இல்லாமல் போய் விடுகிறது. அப்படிப் பார்க்கும்பொழுது, மாநில சர்க்கார்கூட இந்த போர்டை ஏற்படுத்துவதில் காலதாமதம் செய்துகொண்டு வந்திருக்கிறார்கள். மத்திய சர்க்கார் வற்புறுத்தலின் பேரில்தான் இந்த போர்டை இப் பொழுது ஏற்படுத்தவேண்டுமென்ற நியதிக்கு வந்திருக்கிறார்கள்.

இந்த மசோதாவை படித்துப் பார்க்கும்பொழுது இதில் சில பிரிவுகள் இயற்றப்பட்டிருக்கின்றன. ரூ. 1,000-க்கு உட்பட்டு சம்பளம் வாங்குகிறவர் களை போர்டு நியமித்துக்கொள்ளலாம், அதுபோல "சேர்மன்" ரூ. 300-க்கு உட்பட்டு சம்பளம் வாங்குகிறவர்களை நியமிக்கலாம் என்று சொல்லப் பட்டிருக்கிறது. இதையெல்லாம் பார்த்தால் இது ஒரு தனியாக இயங்கக் கூடிய "ஸ்டாசூடரி போர்டாக" இருக்கக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. அதுபோலவேதான் சில நகரப்புறங்களிலே வீடுகள் கட்டவேண்டு மென்று போர்டு நினைத்தால், ஒரு தெருவையோ அல்லது வீடுகளையோ பஞ்சாயத்து போர்டுக்கு நோட்டீஸ் இல்லாமலே எடுத்துக்கொள்ளலாம் என்று இந்த மசோதாவிலே கண்டிருக்கிறது. அப்படிப்பட்ட முக்கியமான இடங்களை போர்டு எடுத்துக்கொள்ளும்பொழுது, நகராண்மைக் கழகங் களுக்கு முன்கூட்டியே தெரிவித்துவிட்டு "நாங்கள் இந்தத் தெருக்களை எடுத்துக்கொள்ளப் போகிறோம், இந்த வீடுகளை எடுத்துக்கொள்ளப் போகி றோம்" என்று நோட்டீஸ் கொடுத்துவிட்டு, அந்த நகராண்மைக் கழகம் அல்லது ஊராட்சி மன்றத்தின் சம்மதத்தின் பேரில் அந்தத் தெருக்க ளையோ அல்லது வீடுகளையோ போர்டு எடுத்துக்கொள்ளலாம் என்ற முறையில்தான் இந்த மசோதா அமைய வேண்டும். அவர்கள் சம்மதம் இல்லாமலே போர்டு எடுத்துக்கொள்ளுவதற்கு இந்த மசோதாவில் வகை செய்திருப்பது அவ்வளவு உசிதம் அல்ல. ஆகையினால், இந்த மசோதா வில் சில குறைபாடுகள் உண்மையிலேயே இருக்கின்றன. அவைகளை யெல்லாம் பொறுக்குக் கமிட்டி பரிசீலனை செய்து ஒரு நல்ல முடிவுக்கு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மசோதாவின் அடிப்படை கருத்து "மாஸ்டர் பிளான்" தான். திரு சட்டநாதக் கரையாளர் அவர்கள் சொன்னதுபோல நகரத்திற்கு மாத்திரம் அல்லாமல், ராஜ்யம் பூராவுக்குமே ஒரு மாஸ்டர்

9th September 1960] [Sri R. Venkataraman]

பிளான் போட்டு, அதை எகோபித்த முறையில் செய்ய வேண்டும் என்பதற்குத்தான் இந்த போர்டு நிறுவப்பட்டு, அதற்கு இவ்வளவு அதிகாரங்கள், அதற்கு வேண்டிய வசதிகள் செய்துகொடுக்கப்படுகின்றன. மாஸ்டர் பிளான் சுலபமாக எழுதிவிடலாம். பிளான் போடுவது கஷ்டமல்ல. ஆனால், அதை நிர்வகிக்கக்கூடியவர்களிடத்தில் அந்தப் பொறுப்பைக் கொடுத்தால்தான், எந்த அளவுக்கு அவர்களால் செய்ய முடியுமோ அதற்கு பிளான் போடுவார்கள். ஹௌஸிங் போர்டு மாகாணம் பூராவுக்கும் இருக்கிற காரணத்தினாலே, அவர்கள் எந்தவிதமான ஒரு மாஸ்டர் பிளான் செய்ய முடியும், தயார் பண்ண முடியும் என்பதையெல்லாம் ஆலோசனை செய்து அந்த முடிவுக்கு உகந்த மாஸ்டர் பிளானை தயாரிக்கும்படி விடுவார்கள். அதற்கும் இதில் இடம் இருக்கிறது என்பதைத்தான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இரண்டாவதாக, நகரங்களை சுற்றி பாக்டரிகள் வருவதினால் நெருக்கடி அதிகமாகிறது என்பது சர்க்காருக்கு நன்றாகத் தெரியும். ஆகையினால் கூடுமான அளவுக்கு சென்னை நகரத்திலிருந்து 15 மைல்களுக்கும் அப்பாலும், முனிசிபாலிடிகளிலிருந்து 5 மைல்களுக்கு அப்பாலும் தான் சாதாரணமாக "ஆர்டினரியாக" பாக்டரிகள் வைக்க வேண்டும் என்று நாங்கள் சிபார்சு செய்திருக்கிறோம். அம்மாதிரி ஒரு விதி போட்டால் அதிலே என்ன கஷ்டம் என்றால், சில வசதிகள் சில பாக்டரிகளுக்கு அவசியமாக இருக்கும். அதற்காக ஒரு சட்டம் போட்டுவிட்டால், அப்பொழுது அந்த இடத்தில் பாக்டரியே வைக்க முடியாத நிலைமை ஏற்பட்டு, பாக்டரி வராமலே போய்விடலாம். அதற்காகத்தான் சாதாரணமாக சென்னை நகரத்திற்கு 15 மைல்களுக்கு அப்பாலும், முனிசிபாலிடிகளுக்கு 5 மைல்களுக்கு அப்பாலும் பாக்டரிகள் அமைக்கப்படவேண்டும் என்று ஒரு சிபார்சு மாதிரி செய்திருக்கிறோம். அம்மாதிரி அமைப்பதற்கு ஏற்பாடும் செய்துகொண்டிருக்கிறோம். பாக்டரி பிரதம இன்ஸ்பெக்டருடைய உத்தரவு இல்லாமல் பாக்டரி வைக்க முடியாது. அவரிடத்தில் சென்றால், இவ்விதமாக சர்க்கார் அபிப்பிராயம் இருக்கிறது என்பதை அவர் தெளிவாகச் சொல்லுவார். அதற்கு உகந்தபடி பாக்டரி அமைப்பதற்கு முயற்சி செய்வார்கள். முடியவில்லை என்று சொன்னால், அதற்காக பாக்டரியே வைக்கக்கூடாது என்று சொல்லுவது நன்றாக இருக்காது.

அதுபோலவேதான், சாதாரணமாக பாக்டரிக்கும், இண்டஸ்டிரியல் எஸ்டேட்டுக்கும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. இண்டஸ்டிரியல் எஸ்டேட்டை நாம் வைக்கிறபொழுது, பக்கத்தில் அந்தப் பொருள்களை உபயோகப்படுத்தக்கூடிய பெரிய தொழில்கள் இருந்தால்தான், இண்டஸ்டிரியல் எஸ்டேட் வளர்ச்சி அடையும். பெரிய தொழில்களுக்கு உதவிகரமாக உள்ள "காம்போனெண்ட் பார்ட்ஸ்" உற்பத்தி செய்வதற்காகத்தான் இண்டஸ்டிரியல் எஸ்டேட் ஏற்படுத்தப்படுகிறது. பாக்டரி அந்தப் பகுதியில் இருந்தால்தான் இட நெருக்கடி ஏற்படும். இண்டஸ்டிரியல் எஸ்டேட் அங்கு அமைப்பதினால் ஜன நெருக்கடி ஏற்பட்டுவிடாது. ஏனென்றால் அவைகள் சிறு சிறு தொழிற்சாலைகள். குறைவான எண்ணிக்கை தொழிலாளர்களைத்தான் அவர்கள் வேலைக்கு அமர்த்துவார்கள். பெரிய பாக்டரிகள் வைப்பதினால்தான் அதிகமான ஜனத்தொகை நெருக்கடி ஏற்படும். அதற்காகத்தான் சில விதிகளெல்லாம் ஏற்படுத்தியிருக்கிறோம்.

இன்னொரு பெரிய கஷ்டம் என்னவென்று சொன்னால், இன்றைக்கு பாக்டரி வைப்பவர்களெல்லாம், பாக்டரி வைப்பதோடுகூட அவர்களுடைய தொழிலாளிகளுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்க வேண்டுமென்பதை ஒத்துக்கொள்ளுவதில்லை. எவ்வளவு முறை நாம் அதை வற்புறுத்தினாலும், அது வற்புறுத்தலோடு நின்றுவிடுகிறது. அதற்காக சட்டம் செய்ய வேண்டுமா என்ற நிலைமையை இப்பொழுது பரிசீலனை செய்யவேண்டும். சென்னை ராஜ்யத்தில் 3 முறை இதற்காக நாங்கள் மகாநாடு நடத்தி, அதற்கு பாக்டரி துறையிலே இருக்கக்கூடிய அதிபர்களையும் தொழிலாளர்

களையும் கூப்பிட்டு விவாதம் செய்தோம். அவர்களுக்கு சர்க்கார் 25 சத விகிதம் மான்யம் கொடுப்பதைக்கூட எடுத்துச் சொன்னோம். உலகத்திலே எங்கும் கண்டிராத புதுமையாக நமது இந்திய நாட்டிலே கொடுக்கிறோம். தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுத்தால் முதலாளிக்கு 25 சத விகிதம் மான்யம். வேறு எங்கும் கிடையாது மான்யம் கொடுக்கும் முறை. அப்படிக் கொடுத்தாலும், நம்முடைய ராஜ்யத்தில் போதிய அளவுக்கு முதலாளிகள் தொழிலாளிகளுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு முன்வரவில்லை. அதை எப்படி சமாளிப்பது என்பதை சர்க்கார் இன்றைக்கு யோசனை செய்துகொண்டிருக்கிறது.

நிலம் வாங்கி விற்கிறபொழுது விலை அதிகமாக போய்விடுகிறது என்ற குற்றத்தை திருமதி அனந்தநாயகி அவர்கள் சொன்னார்கள். திரு. அன்பழகன் அவர்களும் சொன்னார்கள். இது ஏன் ஏற்படுகிறது என்பதை நான் சற்று விளக்க வேண்டும்.

12-30 p.m. சி.ஐ.டி. ஸ்தாபனத்தில் வீடு கட்ட வேண்டுமென்ற திட்டத்தை எடுத்துக் கொண்டால் அங்கே ரோடு போடுவதற்கு நிலம் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது, பார்க் அமைக்க நிலம் ஒதுக்க வேண்டியதாக இருக்கிறது, பள்ளிக்கூடம் வைக்க நிலம் ஒதுக்க வேண்டியதாக இருக்கிறது, கடைகள் கட்டுவதற்கு நிலம் ஒதுக்க வேண்டியதாக இருக்கிறது. ஆகவே எவ்வளவு நிலம் ஒதுக்கினாலும் சற்றேறக்குறைய மூன்றில் இரண்டு பங்கில்தான் வீடுகள் கட்ட முடிகிறது. சாதாரணமாக நாம் 90 ஏக்கர் நிலம் வாங்குவதாக இருந்தால் சற்றேறக்குறைய அதில் முப்பது ஏக்கர் நிலத்தில் பார்க் அமைக்க வேண்டியதாக இருக்கிறது, ரோடு போட வேண்டியதாக இருக்கிறது, பள்ளிக்கூடம் கட்ட வேண்டியதாக இருக்கிறது. இவைகள் எல்லாவற்றிற்கும் செலவு செய்துவிட்டு பாக்கி இருக்கக்கூடிய 60 ஏக்கர் நிலத்தில் வீடுகள் கட்ட வேண்டியதாக இருக்கிறது. அப்படிக் கட்டும் போது முப்பது ஏக்கரில் செய்யப்பட்ட செலவுகளையெல்லாம் இந்த 60 ஏக்கரில் வீடுகள் கட்டுவதற்கு சேர்க்க வேண்டியதாக இருக்கிறது. அதனால் அந்த நிலத்தின் விலை அதிகமாக ஆகிறது. 90 ஏக்கர் நிலத்தில் வீடுகள் கட்டக்கூடிய செலவை 60 ஏக்கர் நிலத்தில் கட்டக்கூடிய வீடுகளின் விலையில் வைக்க வேண்டியதாக இருக்கிறது. மற்றும் தண்ணீர் வசதி, குழாய் வசதி, சாக்கடை வசதி, இவைகளையெல்லாம் செய்ய வேண்டியதாக இருக்கிறது. அவைகளின் செலவும் வந்து சேருகிறது. இவைகளையெல்லாம் சேர்த்துக் கணக்குப் போட்டால் க்ரௌண்டின் விலை அதிகமாக ஆகிறது. அதனால் வீட்டின் விலையும் அதிகமாக ஆகிறது. இப்படி ஒரு இடத்தில் வீட்டின் விலை அதிகமாகப் போனவுடன் பக்கத்திலுள்ள வீட்டின் விலையும் அதிகமாகப் போய் விடுகிறது. பக்கத்தில் லாண்ட் அக்விசிஷன் பிரகாரம் வாங்கும்போது விலை என்ன ஆகிறது என்றால் இந்த அடிப்படையில்தான் அங்கும் விலை அதிகமாக ஆகிறது. இந்த அடிப்படையில்தான் அங்கும் விலையை நிர்ணயம் செய்கிறார்கள். கோர்ட்டுக்குச் சென்றாலும் அங்கேயும் பக்கத்திலுள்ள விலையை அனுசரித்துத் தான் விலையை நிர்ணயம் செய்கிறார்கள். பக்கத்தில் மூவாயிரம் ரூபாய்க்கு விற்றால் அங்கே செய்யப்பட்டிருக்கிற சௌகர்யங்களைப் பார்த்து, அதாவது பார்க் வசதி பள்ளிக்கூட வசதி, சாக்கடை வசதி, குடி தண்ணீர் வசதி இவைகளைப் பார்த்து டெவலெப்மெண்ட் ஆகாத இடத்திற்கும் அதிகப்படியான விலையை வைக்கிறார்கள். அங்கே மூவாயிரம் என்று சொன்னால் இங்கு ஆறாயிரம் ரூபாய் என்று சொல்லுகிறார்கள். ஆகவே இப்படி விலை அதிகமாகப் போய்க்கொண்டிருப்பதைத் தடுக்க ஆலோசனை செய்து கொண்டிருக்கிறார்கள். உண்மையாகவே நிலத்தின் விலை அதிகமாக விற்பதற்குக் காரணம் இன்றைக்கு அவற்றிற்கு காம்பென்சேஷன் கொடுப்பதுதான் காரணம். இப்படி காம்பென்சேஷன் கொடுக்கக்கூடிய கோளாறு தான் இந்த விதத்தில் கொண்டுவிடுகிறது. நிலத்தை எடுத்துக் கொண்டால் அதை எப்படி எடுத்துக்கொள்வது, சட்டப்படி எப்படி எடுத்துக் கொள்வது, அதற்கு என்ன காம்பென்சேஷன் கொடுப்பது, அதற்கு ஏதாவது ஆட்சேபணை இருக்கிறதா என்பதையெல்லாம் பார்க்கவேண்டிய

9th September 1960] [Sri R. Venkataraman]

தாக இருக்கிறது. ஆட்சேபணை இருந்தால் அவற்கு அவகாசம் கொடுத்து அதற்குப் பிறகு எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. இதற்கெல்லாம் காலதாமதம் ஆகிறது. காம்பென்சேஷன் கொடுத்து பெரிய நிலத்தை எடுத்துக்கொள்வதாக இருந்தால் ஏழைகள் விட்டுக் கொடுக்க தயாராக இருக்கிறார்கள். அப்பொழுது சுலபமாகக் கிடைக்கிறது மலிவாகவும் கிடைக்கிறது. வட சென்னையில், வியாசர்பாடியில் ஆயிரம் ஏக்கர் நிலத்தை வாங்க ஒரு ஸ்கீம் செய்திருக்கிறோம். அங்கே வீடு கட்டும் திட்டம் போட்டிருக்கிறோம். மேற்கு மதராவஸிலும் ஆயிரம் ஏக்கருக்கு திட்டம் போட்டிருக்கிறோம். இனிமேலாவது தெற்கு வளருகிறது என்று சொல்ல மாட்டார்கள் என்று நினைக்கிறேன். எந்தப் பகுதியில் மலிவாகக் கிடைக்கிறதோ அங்கேயெல்லாம் வாங்கப்படுகிறது. எங்கேயெல்லாம் நெருக்கடி ஏற்படுகிறதோ அங்கே யெல்லாம் நடவடிக்கை எடுக்கப்படுகிறது. அந்த நெருக்கடியை சமாளிக்க ஒரு போர்ட்டு இருந்தால் முடியும், அதுதான் அதைப்பற்றி பரிசீலனைசெய்ய முடியும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. மொ∴பசலை எடுத்துக்கொண்டால் கோயம்பத்தூரில் சென்னையை விட விலை அதிகமாக உயர்ந்து இருக்கிறது. இன்னும் உயர்ந்துகொண்டே போகிறது. அவர்களுக்கு அங்கே வீடுகள் கட்ட வேண்டுமென்றால் கட்டவே முடியாது. அதே மாதிரி நகரங்களில் வீடுகள் கட்டுவதாக இருந்தால் அது போர்டினால்தான் முடியும். சில இடங்களில் நிலத்தினுடைய விலை ஒரு ஏக்கர் லட்ச ரூபாய்க்கு மேல்கூட போயிருக்கிறது. சாதாரணமாக லோ இன்கம் க்ரூப்புக்கு பதினெட்டு வீடுகள் கட்டலாம். இருபது வீடுகள் என்று வைத்தாலும் க்ரௌண்ட் ஐந்தாயிரம் ரூபாய் ஆகும். அம்மாதிரி கட்டுவது நம்மால் ஆகாது. ஆகவே இந்த திட்டங்களையெல்லாம் எங்கே செய்ய முடியும் என்று பரிசீலனை செய்து பார்த்துக்கொண்டிருக்கிறோம். நகரங்களுக்கு வெளியே இருக்கும் இடங்களைப் பார்த்து கட்டிக்கொண்டிருக்கிறோம். குமரன் நகர், திரு. வி. க. நகர் இவைகளைப்பற்றியெல்லாம் சொன்னார்கள். ஆரம்பத்தில் அங்கே இடம் நல்லதாகத்தான் இல்லை. ஆனால் இன்றைக்கு அங்கு போய் பார்த்தால் தெரியும் எவ்வளவோ நல்லதாக இருக்கிறது. இதற்கு முன் அங்கு பயிர் செய்துகொண்டிருந்தார்கள். அது வயலாக இருந்தது. அந்த இடங்கள் இப்பொழுது செட் ஆகி விட்டது. செட் ஆனவுடன் எவ்வளவோ நலமாக இருக்கிறது. அங்கெல்லாம் மண் செட் ஆவதற்கு கொஞ்சம் நாட்களாகிறது. அதனால்தான் முதலில் நன்றாக இல்லை. சிறு இடங்களில் குழாய்கூட உடைந்து போய் விட்டன. மண் செட் ஆனவுடன் அவைகள் எல்லாம்கூட சரியாக இருக்கிறது. இரண்டு மூன்று வருஷங்களுக்குள் எந்தக் குழாய் அமைத்தாலும் அவைகள் உடைந்து போய் விடுகின்றன. அதன் பிறகு எல்லாம் சரியாகிவிடுகின்றன. கொஞ்ச நாட்களுக்கு கஷ்டமாகத்தான் இருக்கும். நாலைந்து ஆண்டுகள் கழிந்து விட்டால் எல்லாம் சரியாகி விடுகிறது. அதன் பிறகு சமாளித்துக் கொள்ளலாம். கவர்ண்மெண்டில் வீடு கட்டுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். கவர்ண்மெண்ட் ஹௌஸ் கொடுப்பது இல்லை. சர்க்காரில் வீடுகள் கட்டி கொடுக்கிறார்கள். கவர்ண்மெண்ட் ஹெஸ் கொடுக்கக்கூடிய அளவுக்கு சர்க்காரில் வீடுகள் கட்டிக் கொடுக்க முடியாது.

கடைசியாக, மத்திய சர்க்காருடைய தூண்டுதலின் பேரில் இந்த போர்டு அமைக்கப்படுகிறது என்று சொல்லுகிறார்கள். அப்படி இல்லை. 1958-ம் வருஷத்திலேயே நாங்கள் ஸ்டாச்சுடரி போர்டை செய்து விட்டோம். அப்பொழுது முதற்கொண்டே அது யோசனையில் இருந்து வந்திருக்கிறது. மத்திய சர்க்கார் சொல்லி விட்டார்கள் என்பதற்காக அதை விட்டு விடுவது என்பதல்ல. அவர்கள் சொல்லி விட்டார்கள் என்பதற்காக அதை வேண்டாம் என்று சொல்வதற்கு இல்லை. நாமே வேண்டுமானால் போர்டே வேண்டாம் என்று சொல்லலாம். மத்திய சர்க்கார் சொன்னதற்காக வேண்டாம் என்று சொல்ல வேண்டாம். போர்டு நல்ல முறையில் வேலை செய்யா விட்டால் வேண்டாம் என்று சொல்லி விடலாம். போர்டு நல்ல முறையில் வேலை செய்தால் எவ்வளவோ உதவியாக இருக்கும். வேலையும் நன்றாக நடைபெறும். அது நமக்கு உதவியாக இருக்கும். இப்படியே நாங்களும் நினைக்கிறோம் மத்திய சர்க்காரும் நினைக்கிறார்கள். மத்திய

சர்க்காரில் ஒருவர் உட்கார்ந்துகொண்டு தீர்மானம் செய்திருக்கிறார்கள் என்று ஸ்ரீ அண்ணாமலை சொன்னார். அப்படியல்ல. ஹௌசிங் மினிஸ்டர்கள் கான்பரன்ஸ் நடந்தது. அதில் நானும் ஒரு மெம்பர்தான். நாங்கள் எல்லோரும் சேர்ந்துதான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம்.

இம்மாதிரி ஒரு போர்டு இருந்தால்தான் ஸ்டாச்சுடரி போர்டு இருந்தால் தான் பணத்தை கடனாக வாங்க முடியும். அப்படி வாங்கி திட்டத்தை நிறைவேற்ற முடியும். சர்க்கார் கொடுக்கக்கூடிய பணத்தை வைத்துக் கொண்டே செய்வதாக இருந்தால் இப்படிப்பட்ட போர்டே வேண்டியதில்லை. சர்க்கார் கொடுக்கக்கூடிய பணமும் போதாது. இப்படிப்பட்ட ஒரு போர்டு இருந்தால்தான் பொது மக்களிடத்திலிருந்தும் பணத்தை கடனாக வாங்கலாம். அப்படி கடனாக வாங்கி திட்டத்தை எல்லா பணத்தையும் வைத்துக்கொண்டு நிறைவேற்றலாம். சர்க்கார் மட்டும் எவ்வளவு பணம் கொடுத்தாலும் போதாது. சர்க்காருடைய பணத்தை வைத்துக்கொண்டு மாத்திரம் திட்டத்தை நிறைவேற்றுவதாக இருந்தால் இந்த போர்டே தேவையில்லை. அந்தந்த இலாகாவே அதைப் பார்த்துக்கொள்ளும். இப்படிப்பட்ட ஒரு போர்டு இருந்தால்தான் நிலங்களை வாங்கி காரியங்களை சீக்கிரத்தில் நிறைவேற்ற முடியும். எல்லா காரியங்களையும் செய்வதற்கு போர்டு சேர்மனுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆயிரம் ரூபாய்க் குக் குறைவாக இருக்கக்கூடிய உத்தியோகஸ்தர்களை நியமிக்கக்கூடிய அதி காரத்தையும் அந்த போர்டுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. எல்லா காரியங் களையும் மந்திரியே பார்ப்பது என்றால் அவருக்கு பயித்தியம்தான் பிடித்து விடும். அதிகாரங்களை பிரித்துப் பிரித்துக்கொடுத்து நிர்வாகத்தை நடத்தினால்தான் உண்மையான ஜனநாயகம் வளரும். எல்லா காரியங் களையும் ஒருவர் தலையிலே வைப்பது என்பது சரியல்ல. நிர்வாகத் தலைமையில் இருக்கக்கூடியவர்களுக்கு இனிமேல் அதிகமாக வேலை இருக்காது. அப்படி அதிக வேலையைக் கொடுத்தாலும் வேலையும் நடக் காது. நமக்கு இருக்கக்கூடிய வேலையில் எல்லாவற்றையும் பார்த்துச் செய்ய முடியாது. அதற்காகத்தான் பிரித்துக்கொடுத்திருக்கிறோம். இதில் ஏதாவது குறைபாடுகள் இருந்து அதை பரிசீலனை கமிட்டியில் எடுத்துச் சொன்னால் அதைப்பற்றி ஆராய்ந்து முடிவு செய்யப்படும் என்பதை சொல்லிக்கொண்டு நான் பிரேரேபித்த பிரேரேபணையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI A. R. MARIMUTHU:** பில்டிங் சொசைட்டி கிராமங்களிலும், சிறிய நகரங்களிலும் இருப்பது இந்த போர்டு நிர்வாகத்தின் கீழ் வந்து விடுமா என்பதை அறிய விரும்புகிறேன்

**THE HON. SRI R. VENKATARAMAN:** ரிஜிஸ்தரார் அப் கோவாபரேடிவ் சொசைட்டி இந்த போர்டில் எக்ஸ் அபிஷியோ மெம்பராக இருப்பார். திட்டங்கள் போடுவதெல்லாம் அந்த போர்டு. ஆனால் அவற்றை நிறை வேற்றுவது ரிஜிஸ்தரார் அப் கோவபரேடிவ் சொசைட்டி. இப்பொழுது நடக்கும் முறையில்தான் எல்லாம் நடக்கும்.

DEPUTY SPEAKER : I think the House gives permission to substitute the name of Sri S. Pakkirisami Pillai in the place of Sri K. R. Nallasivam in the list of names of members to serve on the Select Committee to consider the Madras State Housing Board Bill, 1960.

The question is—

"That the Madras State Housing Board Bill, 1960 (L.A. Bill No. 31 of 1960) be referred to a Select Committee of the House consisting of the following Members :—

(1) The Hon. Sri M. Bhaktavatsalam.

(2) Sri P. G. Karuthiruman.

(3) Sri K. S. G. Haja Sheriff.

9th September 1960] [Deputy Speaker]

(4) Sri K. Vinayakam.
(5) Sri R. Krishnasami Naidu.
(6) Sri V. Vedayyan.
(7) Sri V. Sankaran.
(8) Sri T. K. Subbiah.
(9) Sri S. Ranganatha Mudaliar.
(10) Sri K. S. Subramania Gounder.
(11) Sri A. V. P. Periavalaguruva Reddiar.
(12) Sri N. K. Palanisami.
(13) Sri M. Anandan.
(14) Sri S. T. Subbiah Gounder.
(15) Sri S. Pakkirisami Pillai.
(16) The Hon. Sri R. Venkataraman."

The motion was put and carried.

DEPUTY SPEAKER : Under rule 99 of the Assembly Rules I nominate the Hon. Sri R. Venkataraman to be the Chairman of the Select Committee.

Shall I adjourn the House?

(Some of the hon. Members wanted that the remaining Bills might be taken up the next day.)

**THE HON. SRI R. VENKATARAMAN** : இந்த திருத்த மசோதாவின் மூலம் பல சலுகைகள் கொடுக்க வந்துள்ளோம். இதில் செய்ய இருக்கின்ற மாறுதல்கள் எல்லாம் மக்களுக்கு நன்மையளிக்கிற மாறுதல்கள். இதை ஒத்திப் போடவேண்டுமென்று கனம் அங்கத்தினர்கள் சொல்லமாட்டார்கள் என்று நினைக்கிறேன். நாளைக்கே கவுன்சிலிலும் நிறைவேறவேண்டும். ஆகையால் நாம் செய்ய இருக்கின்ற நன்மைகளை எல்லாம் கொஞ்சம் ஒத்திப்போடவேண்டுமென்று நினைத்தார்களானால் நான் ஒத்திப்போடத் தயாராய் இருக்கிறேன்.

## IV.—ANNOUNCEMENTS.

### (2) THE MADRAS GENERAL SALES TAX (AMENDMENT) BILL, 1960.

DEPUTY SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for moving the following Government Amendment to the Madras General Sales Tax (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 25 of 1960).

After clause 13, *add* the following clause :—

"14. Amendment of the Second Schedule, Madras Act I of 1959.—In the second schedule to the Principal Act, for item 6 and the entries relating thereto, the following item and entries shall be substituted, namely :—

| | | |
|---|---|---|
| 6 (*a*) Oil seeds. other than cardamom and groundnut, that is to say, seeds yielding non-volatile oils used for human consumption or in industry or in the manufacture of varnishes, soaps and the like or in lubrication and volatile oils used chiefly in medicines, perfumes, cosmetics and the like. | Do. | 2 |

| | | |
|---|---|---|
| (*b*) Cardamom .. .. .. .. | At the point of first purchase in the State. | 2 |
| (*c*) Groundnut .. .. .. .. | Do. | 1" |

III.—GOVERNMENT BILLS—*cont.*

(3) THE MADRAS GENERAL SALES TAX (AMENDMENT) BILL, 1960 (L.A. BILL NO. 25 OF 1960).

*THE HON. SRI R. VENKATARAMAN: Sir, I beg to move—

"That the Madras General Sales Tax (Amendment) Bill, 1960 [a] (L.A. Bill No. 25 of 1960) be taken into consideration."

The working of the Madras General Sales Tax Act, 1959, during the past one year and more has given rise to several problems connected with the administration of the Act necessitating amendments to certain provisions in the Act. The present Bill embodies the amendments found necessary. Now, I shall proceed to explain the scope of the several clauses of the Bill.

The High Court, Madras, has held that sales tax cannot be levied on works contracts relating to movable properties with no element of sale in them. The Government have therefore decided to omit the provisions in the Act relating to works contracts on movable property. Clause 2 of the Bill provides for this I hope the House will agree to this.

The intention behind section 3 (3) of the Act was that the manufacture should be inside the State and that such manufacture should be for the purpose of sale irrespective of the fact whether the sale is inside or outside the State. It was not the intention to impose a restriction that the sale of finished products should be completed within the State. To give effect to the intention correctly, it is proposed to amend section 3 (3) of the Act suitably. Clause 3 of the Bill provides for this.

இதை நான் ஆங்கிலத்தில் படிப்பதற்குக் காரணம் இது வரிவிதிப்பு பற்றிய மசோதா. ஆகவே பிழை இல்லாது ஷரத்துக்கள் இருப்பதற்கு ஆங்கிலத்தில் சொல்கிறேன், விளக்கம் தேவைப்படுகிற இடத்தில் தமிழில் சொல்லத் தயார்.

இதிலே என்ன தவறு ஏற்பட்டுவிட்டது என்றால் 'மானுபாக்சர் வித்தின் தி ஸ்டேட்' என்று இருப்பதற்குப் பதிலாக சேல் இன் தி ஸ்டேட் என்று இருப்பதனால் நம் ராஜ்யத்தில் உற்பத்தி செய்கின்ற பண்டங்கள் வெளி ராஜ்யங்களுக்குப் போனாலும் கூட அதிக வரி விகிதம் கூடவேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டது. அதனால்தான் இதை இப்படித் திருத்துகிறோம்.

---

[a] Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 17th August 1960,

9th September 1960] [Sri R. Venkataraman]

It is also proposed to give retrospective effect to this clause from 1st April 1959, that is, the date of commencement of the Madras General Sales Tax Act, 1959. Clause 1 (2) of the Bill provides for this.

Sub-section (1) of section 20 of the Madras General Sales Tax Act, 1959, lays down that every dealer whose total turnover in any year is not less than Rs. 7,500 shall, and any other dealer may get himself registered under that Act. Section 20 (2) of the Act lays down that certain classes of dealers specified in that section should get themselves registered under the Act irrespective of the quantum of the total turnover. The registration under the Act is mandatory. There is no power for the Government to grant any kind of exemption from the operation of the provisions relating to registration under the Act. It has been found necessary to give exemption from registration under the Act in the case of certain dealers who are not liable to pay sales tax by virtue of exemption from sales tax granted by the Government or to enhance the total turnover limit in the case of certain dealers.

அதாவது சென்ற வருஷத்தில் காய்கறிகளுக்கு எல்லாம் ரூபாய் 30 ஆயிரத்துக்கு மேல் வியாபாரம் செய்தால் வரி கொடுத்தால் போதும் என்று சொன்னோம். ஆனாலும் 7,500 ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்யக்கூடியவர்கள் எல்லாம் ரிஜிஸ்டர் பண்ணிக்கொள்ளவேண்டும். அதற்கு விலக்குக் கொடுக்க நமக்கு அதிகாரம் இல்லை. அதைக்கொடுப்பதற்குத்தான் அதிகாரம் இப்போது கோரியிருக்கிறோம்.

It is accordingly proposed to take power for the purpose. Clause 4 of the Bill accordingly provides for the grant of such exemptions or enhancement of the total turnover limit by notification, subject to such restrictions and conditions as may be specified in the notification. The clause also provides for specifying the area in which the concession will apply and for cancellation or variation of the concession. This clause is proposed to be given retrospective effect from 1st April 1959, i.e., the date of commencement of the Madras General Sales Tax Act, 1959.

Clause 1, sub-clause (2) of the Bill provides for this also.

Rule 25 of the Madras General Sales Tax Rules, 1959, provides for the issue of permits to the dealers themselves or to travelling salesmen or representatives of the dealers who sell goods in places other than those mentioned in the certificate of registration of the dealers. The Committee on Subordinate Legislation has pointed out that this rule is beyond the rule-making powers conferred by the Act. As provisions similar to those contained in this rule are necessary to prevent suppression by dealers of transactions effected through travelling salesmen and representatives it is proposed to incorporate the necessary provisions in this regard in the Act itself. New section 21-A proposed to be inserted by clause 5 of the Bill contains the provisions in this regard. It is also proposed to make the failure to take out a permit under the proposed new section 21-A an offence, punishable with a fine up to Rs. 200 as provided in section 45 (1) from certain other forms of offences. Clause 11 contains the provision in this regard.

[Sri R. Venkataraman] [9th September 1960

The Government have no power at present under the Madras General Sales Tax Act, 1959, to require a dealer to keep and maintain any specified record found necessary to prevent evasion of tax. It has been brought to the notice of the Government that dealers in jewellery are likely to evade tax by claiming that jewels sold to customers are made to order with the gold or silver supplied by the customer.

இதிலே கொஞ்சம் விளக்க வேண்டுமென்று நினைக்கிறேன். இன்றைக்கு நகை வியாபாரிகள் செய்த நகையாக விற்பனை செய்தால் 2 சத விகிதம் வரி கொடுக்க வேண்டும். தங்கக் கட்டியாக விற்றால் ½ சத விகிதம் வரிதான் கொடுக்கவேண்டும். ஆகவே அவர்கள் நகைகளை விற்கும்போது ஒரு பில் தங்கமாக விற்றதாகக் காட்டி இன்னொரு பில் அவர்கள் நகை பண்ணக்கூலி கொடுத்தது போலக் காட்டி ½ சத விகிதம் மாத்திரம் வரி கொடுத்துவிட்டுத் தப்பிவிடுகிறார்கள். ஆகவே அதற்கு வேண்டிய மாறுதல் இங்கே செய்யப்பட்டிருக்கிறது.

To prevent evasions of this kind it is considered necessary to prescribe the maintenance by the dealers of order book or any other record that may be found expedient. Clause 6 of the Bill provides for the amendment of section 40 of the Act in this regard. Clauses 7 to 12 provide for consequential amendments to sections 41 and 57 of the Act, respectively.

Sections 43 and 44 of the Madras General Sales Tax Act, 1959, require the owner or other person in charge of a boat or a goods' vehicle to submit to the Commercial Tax Officer, having jurisdiction over the area in which the goods are delivered, copies of the log book, goods vehicle record or trip-sheet, as the case may be, with such further particulars and within such time as may be prescribed under the Act. Rule 35 (1) of the Madras General Sales Tax Rules, 1959, requires the owner or other person in charge of the goods' vehicle or boat, among other things, to carry with him a goods' vehicle record, a trip-sheet, or a log book, as the case may be and also a bill of sale or a delivery note.

அதாவது லாரி மூலமாகச் சாமான் கொண்டு போனால் அந்த லாரி சாமான் யாரிடமிருந்து, யாருக்கு விற்கப்பட்டு செல்கிறது என்பதற்கு "டூப்ளிகேட் பில்" லாரிக்காரர்கள் வைத்திருக்கவேண்டுமென்று சொன்னோம். காரணம் அந்தச் சாமான் சேல்ஸ் டாக்ஸ் கட்டியதா இல்லாததா என்று தெரிந்து கொள்வது அவசியமாக இருந்தது. அதற்காகத்தான் திருத்தம் கொண்டுவரப்பட்டு இருக்கிறது.

It has been held that rule 35 (1) is beyond the rule-making powers conferred by the Act and that no section specifically empowers the Government to prescribe the documents that should be carried by the person in charge of a goods vehicle or boat. Often the 10 per cent book or the goods vehicle record or trip sheet which the goods' vehicles or boats carry do not contain the full particulars of the consignor and the consignee of the goods with the result that the object with which sections 43 and 44 were enacted, viz., to prevent evasion of tax in respect of goods transported by lorries and boats, is not achieved. Therefore, the provisions in rule 35 requiring the possession by the persons in charge

9th September 1960] [Sri R. Venkataraman]

of a goods vehicle or a boat of bill of sale or delivery note containing the full particulars of the consignor and the consignee is necessary in the interests of checking the evasion of tax. It is accordingly proposed to make it obligatory on the part of the owner or other person in charge of a boat or goods vehicle to carry with him a bill of sale or delivery note relating to the goods, besides the log book, trip sheet or the goods vehicle record. Sections 43 and 44 of the Act are accordingly proposed to be substituted by new sections 43 and 44 which give effect to the requirements of the Government. Clauses 9 and 10 contain the provisions in this regard. Clause 8 provides for the amendment of section 42 (3) of the Act so as to bring it in line with the new sections 43 and 44.

Clause 13 (1) of the Bill seeks to rectify certain errors in punctuation in the existing entry in items 23 of the First Schedule to the Madras General Sales Tax Act, 1959.

The intention behind item 24 in the Frist Schedule to the Madras General Sales Tax Act, 1959 is to exclude from the scope of that item ' milk ' falling under section 3 (1) of the Act which is not merely fresh milk but all liquid milk, whether fresh or not.

இப்பொழுது " ப்ரஷ் மில்க் "க்கு மட்டும்தான் குறைந்த விகிதம் போட்டிருக்கிறோம். என் அபிப்பிராயம் என்னவென்றால், எந்த விதமான மில்க்காக இருந்தாலும் சரி, " டோன்ட் மில்க்காக " இருந்தாலும் சரி, " ரீ-கான்ஸ்டிட்யூடட மில்க் " காக இருந்தாலும் சரி அவைகளுக்கும் வரிக் குறைவு இருக்க வேண்டும்.

Hence it is proposed to omit the word ' fresh ' from item 24.

எந்த விதமான பால், " ரீ-கான்ஸ்டிட்யூடட் மில்க்காக " இருந்தாலும் சரி, " டோன்ட் மில்க்காகயிருந்தாலும் சரி,".

Clause 13 (2) provides for this.

Under item 59 of the First Schedule to the Madras General Sales Tax Act, 1959, ' Wattle bark including dyeing and tanning materials' is liable to single point tax of 3 per cent at the point of last purchase. With reference to representations seeking clarification of the materials covered by that item, the Government have decided to specify only avarm bark, konnam bark, wattle bark, wattle extract, quobracho and chestnut extract as items liable to tax at single point under the item.

தோல் பதனிடுவதற்கு என்னென்ன உபயோகிக்கிறார்களோ, எல்லாவற்றிற்கும் 1 சத வீதம் வரி விதிப்பு என்று குறைப்பு செய்திருக்கிறோம்.

With effect from 1st April 1960, the Government have reduced the rate of tax on wattle bark including dyeing and tanning materials from 3 per cent to 1 per cent and this reduction is also embodied in the amendment to this item. Clause 13 (3) provides for these proposals.

[Sri R. Venkataraman] [9th September 1960

Under item 6 (a) in the Second Schedule to the Madras General Sales Tax Act, 1959, groundnut is liable to a single point tax of 2 per cent at the point of first sale in the State. The experience gained from 1st April 1959 shows that the levy of tax at the point of first sale in respect of groundnut has caused great difficulties.

எதனால் இந்தக் கஷ்டம் என்று சொல்ல விரும்புகிறேன். சட்டசபையிலும் சரி, வெளியிலும் சரி ஒரு முனை வரி வேண்டுமென்று சொல்லி விடுகிறோம். ஒரு முனை வரி என்று சொன்னால் எல்லோருக்கும் நன்மை ஏற்படும் என்ற அபிப்பிராயம் நமக்குள் இருக்கிறது. அப்படிச் சொல்லி, மணிலாப் பயறுக்கும், கடலைக்கும் ஒரு முனை வரி போட்டு விட்டோம். எனக்குத் தெரியும், கனம் அங்கத்தினர் சுப்பையா அவர்கள் இதுபற்றி காரமாகப் பேசப் போகிறார்கள் என்று. ஒரு முனை வரி போட்டதால் விளைவு என்னவென்றால் ஏதோ 20, 30 எக்ஸ்பெல்லரை வைத்துக் கொண்டு வியாபாரம் செய்பவர்களிடம் வாங்கியது போக உற்பத்தி செய்பவர்களிடம் வரி வசூல் செய்யும் நிலை ஏற்பட்டு விட்டது. கூடையில் வைத்து கடைக்கு போய் விற்பதானாலும், சந்தைக்கு கொண்டு போனாலும் சரி உடனடியாக ரெஜிஸ்டர் செய்யவேண்டுமென்று இருக்கிறது. சாதாரணமாக 200 பேர்கள் " எக்ஸ்பெல்லர்கள் " வைத்துககொண்டு இருப்பவர்களுக்கு வரி விதிப்பு செய்து கொண்டிருந்தோம். இன்று இரண்டு லட்சம் துண்டு நிலங்கள் வைத்துககொண்டு கடலை பயறு உற்பத்தி செயபவர்கள் எல்லோருக்கும் வரி விதிக்கும் நிலை ஏற்பட்டு விட்டது. அதை மாற்ற வேண்டுமென்று சர்க்கார் முடிவு செய்து வாங்குகிற இடத்தில், அவர்கள் ரிஜிஸ்டர் செய்து கொள்ள வேண்டியதில்லை. அவர்கள் விற்பனைவரி கட்டவேண்டியதில்லை, யார் அதை உபயோகப்படுத்த வாங்குகிறார்களோ அவர்கள் 1 சத வீதம் கொடுத்தால் போதும், 2 சத வீதத்துக்கு பதிலாக. எண்ணெயாக்கி விற்கும்போது வழக்கபடி 3 சத வீதம் கொடுக்க வேண்டும் என்று திருத்தியிருககிறோம்.

As the commodity is liable to single point tax at the point of first sale, growers of groundnuts who are in thousands in districts and who generally sell them in the shape of kernels, become liable to tax and registration under the Act regardless of the quantum of their turnover. There is also administrative difficulty, as the issue of registration certificates to several thousands of growers and also checking their accounts in the collection of tax will be a stupendous job. In order to mitigate the hardship to the growers, the Government have decided to change the point of tax on groundnut from the first sale to the first purchase as was the case prior to 1st April 1959. The Government have also decided to reduce the rate of tax on groundnut from 2 per cent to 1 per cent. Under the new system the growers who sell their produce either unshelled or shelled will not be liable to pay tax as only the purchasers who will generally be the oil producers will be liable to tax. To give effect to the proposals, I will be moving an amendment to the Bill at the appropriate stage.

I now request that the Bill be taken into consideration.

DEPUTY SPEAKER : Motion moved—

" That the Madras General Sales Tax (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 25 of 1960) be taken into consideration."

The motion is before the House for discussion.

9th September 1960]

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த விற்பனை வரி திருத்த மசோதாவின் மீது நான் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல அவாவுறுகிறேன். இதில், "பாடி பில்டிங்", "சேவிஸ்", அவர்கள் அவர்களாகவே தனியாக உறுப்புகள் போட்டு கட்டக் கூடியவர்களுக்கு விதிவிலக்கு வேண்டுமென்ற நோக்கத்தோடு செய்யப்பட்டிருப்பதை குறைகூறுவதற்கில்லை. ஏற்கனவே அவர்கள் ஒரு முறை தீர்வை கொடுத்து, பார்ட்ஸ்க்கு தனித் தனியாக கொடுத்திருக்கக்கூடியவர்கள் இரண்டாவது தடவையாக பாடியாக கட்டிய பிறகும் வரி கொடுக்கவேண்டுமென்ற நிலை இருப்பது சரியல்ல. ஆனால் புல்லியனுக்கும், பினிஷ்ட் ஆர்ட்டிகிள்ஸ்க்கும் உள்ள வித்தியாசத்தைப் பற்றி இந்த மசோதா வந்த சமயத்திலேயே இந்த சபையில் கூறியிருக்கிறேன். இரண்டிற்கும், வெவ்வேறு பெர்ஸன்டேஜ் இருப்பது சரியல்ல என்பதுதான் என் கருத்து. இன்றும் கூட நான் ஊன்றிச் சொல்ல விரும்புகிறேன், இதில் கொடுத்திருக்கக் கூடிய திருத்த அடிப்படையில் சர்க்காரின் நோக்கம் வெற்றி பெறும் என்று தோன்றவில்லை. புல்லியன் மீதுள்ள வரியைக் கூட்டினால், அது பிற மாநிலங்களோடு இணைந்ததாதலால், நம் மாநிலத்தில் உள்ள விற்பனை பாதிக்கப்படும் என்று சொல்வார்கள். அதே நேரத்தில் "பினிஷ்ட் ஆர்ட்டிகிள்ஸ்" லக்ஷுவரி குட்ஸ்தானே, ஏன் அதற்கு அதிகம் கொடுக்கூடாது என்றால் தப்புவதற்கு மார்க்கம் இருக்கிறது. நான் சொல்வது, புல்லியனுக்கு உயர்ந்த பெர்ஸன்ட் தீர்வை போடவேண்டும். அது, இதர மாகாணங்களும் நம்மோடு இணைந்த ஒரு விகிதாசாரமாகயிருக்க வேண்டும் என்று நான் முன்பு கூறியுள்ளதுபோல் இன்றும் வற்புறுத்த விரும்புகிறேன். இன்று நகைக் கடைக்குச் சென்று எட்டு சவரன் உள்ள ஒரு நெக்லஸ் வாங்குகிறோம் என்றால், எட்டு சவரன்களை அவர்கள் வாங்கிக் கொண்டு அதற்கு இந்த நெக்லஸ் தயார் செய்ததாக கணக்கு எழுதி மேக்கிங் சார்ஜ் மட்டும் வாங்குகிறார்கள். ஸ்டாக் ரெஜிஸ்டர் என்று வைத்திருக்கிறார்கள். நாம் போய் கேட்டவுடன் ஷோ கேஸில் உள்ளதைப் போல் கொடுத்து விடுகிறார்கள். அதே நேரத்தில் இரண்டு இனமாக பில் போட்டு சவரன் வாங்கிக்கொண்டு அதைக்கொண்டு செய்து கொடுத்தது போல் கொடுத்து விடுகிறார்கள். திரும்ப ஒன்று செய்து, பின் வரும் நபர்களுக்கு ஜாபிதா புத்தகத்தைக் காட்டி இதேபோல் செய்து தருகிறோம் என்று ஆர்டர் வாங்குகிறார்கள். ஆக, தப்புவதற்கு, வரி கொடுப்பதிலிருந்து தப்புவதற்கு வழியிருக்கிறது. நான் என் அனுபவத்தில் சொல்கிறேன், வரியிலிருந்து தப்ப வழிகள் இருக்கின்றன. ஆகவே நான் சொல்வது என்னவென்றால் இரண்டிற்கும் ஒரேவித நிரக்குள்ள ஒரு தீர்வையைக் கொண்டு வரவேண்டும். அது உயர்ந்தபட்சமாக இருக்க வேண்டும். இதை, நாம் மட்டும் செய்தால் போதாது. அண்டை மாகாணங்களும் ஒத்துக்கொள்ளும் முறையில் இணைந்த ஒரு தீர்வை வரவேண்டியது அவசியம்.

அடுத்தபடியாக டோனட் மில்க்-களுக்கு விதிவிலக்கு கொடுத்திருப்பதாக அறிவித்திருக்கிறார்கள். அதே நேரத்தில் ஏன் பாலுக்கே பூரா வரியையும் எடுத்துவிட்டால் நன்றாக இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். இந்த இனத்தை நாட்டிலிருக்கின்ற தாழ்ந்த இடத்திலுள்ள மக்கள் முதல் உயர்ந்த இடத்திலுள்ள மக்கள் வரையில் உபயோகித்து வருகிறார்கள், அதிலும் குழந்தைகளுக்குத்தான் இது அதிகமாக பயன்படுகிறது. பெரியவர்கள் இதை அதிகமாக உபயோகிப்பதில்லை. ஆகவே குழந்தைகள்பேரில் கருணை காட்டி வரி விதிப்பிலிருந்து பாலுக்கு விதிவிலக்கு கொடுப்பதற்கு அரசாங்கம் யோசனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். 1-00 p.m.

அடுத்தபடியாக, வெகிக்கிலஸ்-செக்கிங் செய்கின்ற விஷயத்தில், பல இடங்களில் செக்கிங் லாக்-கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இதில் பல தொல்லைகள் இருப்பதாக சொல்லப்படுகின்றது. இதிலும் முக்கியமாக எல்லையில் இருக்கக்கூடியவர்களுக்கு தொல்லைகள் அதிகமாக இருக்கின்றன. ஒரு செக் போஸ்ட் எல்லையிலிருந்து அடுத்த எல்லைக்குள், தங்களுக்குச் சொந்தமான அரிசி, உழுந்து இவைகளை எடுத்துச் செல்லவேண்டு

[Sri K. Sattanatha Karayalar] [9th September 1960

மென்றலும் லாரிகளில் டிரிப், லாக் ஷீட் இவைகள் எல்லாம் காண்பிக்க வேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறார்கள். இதற்கான தஸ்தாவேஜுகள் எல்லாம் வேண்டும் என்று கடுமையாக கேட்டு வருகிறார்கள். ஸ்மக்ளிங் நடக்கும் என்ற காரணத்தின் பேரில், கடுமையாக இருந்து வருகிறார்கள். இதைத் தவிர்க்கக்கூடிய முறையில் சர்க்கார் சில உத்தரவுகளை பிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* Sri K. VINAYAKAM : Sir, while welcoming this amending Bill, General Sales Tax (Amendment) Bill, I wish to thank the Government for having been kind enough to exempt some articles from taxation or reduce the rate of taxation in respect of them. Sir, I believe for some time past some representations have been made and deputations have been waiting on the Hon. Minister to consider the feasibility of exempting articles like glass bangles and glass beads which happen to be cheap ornaments of poor women in our country. These are all perishable articles (laughter) in the sense that they do not stand for a long time. Neighbouring States have been wise enough to reduce the tax if not completely abolish it. But in our State the present rate of taxation on glass bangles is, I think, 6 per cent and it is too much. It is not a luxurious commodity. It is not a thing which is treasured most and it is easily perishable. Poor women in our State go in only for this kind of ornament. Therefore, I do not see any reason why the Hon. Minister should be harsh towards them. But the Hon. Minister in charge of the Bill may plead that he wants finance to execute schemes in our country, and that this is an easy way of making money. As one Minister who preceded him said, this sales tax is more or less a '*kamadhenu*' of this country which yields income easily and I concede this point but why should we be harsh to the most unfortunate section of the population, poor womenfolk who go in for these ornaments. My suggestion is that if it is not possible to exempt them, they should be kind enough at least to reduce the tax to 2 per cent. Other States like Madhya Pradesh, the Punjab and Bombay have reduced the tax in respect of them. To the deputations which waited on the Hon. Minister, the Hon. Minister was kind enough to say that the matter was under consideration. Even to the representations made by some merchants on behalf of the Bangles Association of the Madras State, the reply received was that the matter was under consideration. Even the Women's conference which met at Trivandrum day before yesterday passed a resolution requesting the Madras Government to exempt these bangles from taxation. It was only after a violent agitation and a long struggle in the Madhya Pradesh and Bombay that the tax has been reduced. I do not suggest that we should also take to this agitation in our State. But I hope the Hon. Minister would be kind enough to see his way through to completely abolish the tax in respect of glass bangles and glass beads. In this connection, I may quote an instance to refresh the memory of the Hon. Minister. We were very hoarse in levying tax on vegetables a year ago even though it yielded only about Rs. 3 lakhs every year. We had a very costly experience after levying such kind of taxation. Sir,

**9th September 1960]** **[Sri K. Vinayakam]**

why should we estrange the feelings of our womenfolk in our country? After all, the income derived from this source is very little. They are the people who stand by us and by our Government and let us earn their goodwill also. I never envisaged that some articles would be exempted from the tax. Otherwise, I would have given notice of an amendment. Now, I would request the Government to bring forward their own amendment exempting glass bangles and beads from sales tax. I entreat once again with folded hands and bended knees, the Hon. Minister—because I know that when arguments do not convince him, on compassionate grounds the Government may come down to see their way—and appeal to him in the name of womenfolk to exempt glass bangles and glass beads from the levy of sales tax.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த திருத்த மசோதாவானது, மக்களுக்கு ஏதாவது கஷ்டங்கள் ஏற்படுமானால் அதை உடனடியாக திருத்துவதற்கும் சர்க்கார் தயங்காது என்பதை சுட்டிக்காட்டுகின்ற அளவில் அமைந்திருக்கின்றது என்பதற்காக இதை நான் வரவேற்கிறேன். சமீபத்தில்தான் இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டது என்றிருந்தபோதிலும், இதிலிருக்கின்ற கஷ்டங்களை உணர்ந்து அதற்கு திருத்தம் கொண்டு வந்ததற்காக கனம் அமைச்சர் அவர்களை நான் மிகவும் பாராட்டுகிறேன். அதில் இன்னும் சில மாறுதல்களை செய்திருந்தால், இன்னும் கூடுதலான அளவில் வரவேற்கக் கூடிய முறையில் அமைந்திருக்கும். முதலில் கோடம்பாக்கம் அங்கத்தினர் அவர்களுக்கு (Sri K. Vinayakam தியாகராயநகர்......) தியாகராயநகர் அங்கத்தினர் அவர்களுக்கு, பெண்களின் சார்பாக என் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன். பெண்களை விட மிகவும் உருக்கமாக, பெண்கள் அணிகிற வளையல்களுக்கும் மணி களுக்கும் வரி விலக்கு கொடுக்கவேண்டும் என்று கேட்டார்கள், அவர் களுக்கு என் நன்றியை மீண்டும் தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்த படியாக தங்க நகைகளை எடுத்துக்கொண்டால், தங்கக்கட்டிக்கு அரை சத மானமும், தங்க நகைகளுக்கு 2 சதமானமும் போட்டிருக்கிறார்கள். இதனால் வியாபாரிகள் சர்க்காரை ஏமாற்றுகின்ற வேலைகள் அதிகமாக நடக்கும். அது ஒரு பக்கம் இருந்தாலும் இதே நிலை நீடித்துக்கொண்டிருந்தால் நிச்சயமாக கலை உணர்ச்சி மங்கி விடும். தங்க நகைகளிலுள்ள கலை இல்லாவிட்டால், இந்தநாட்டின் கலை புக ழடைய முடியாது. பழைய நகைகளை எல்லாம் செய்யக்கூடிய திறன் படைத்தவர்கள் நம் நாட்டில் எவ்வளவோ பேர்கள் இருக்கின்றார்கள். அதேபோன்று தற்காலத்தில் வளர்ந்து வருகின்ற நாகரீக முறையில் நகைகளைச் செய்வதற்கு திறன் படைத்தவர்களும் நம் நாட்டில் இருக்கின் றார்கள். இந்த நிலைமையில், தங்கக்கட்டிகளுக்கு வரி குறைவாகவும் நகைகளுக்கு வரி கூடுதலாகவும் போட்டிருந்தால் இயற்கையாகவே இவர் களிடம், நகைகளை நல்ல முறையில் கலை ஆர்வத்தோடு செய்ய வேண்டும் என்கின்ற ஆர்வம் போய் விடும். அதோடு ஓரளவுக்கு வியாபாரிகள் அரசாங்கத்தை ஏமாற்றுகின்ற முறைதான் வளர்ந்து கொண்டிருக்கும். ஏதோ லக்ஷுவரி சாமான்களுக்கு கூடுதல் வரி போட வேண்டியது ஓரள வுக்கு நியாயம் என்றிருந்தபோதிலும்கூட, பசியில்லாமல் ஏப்பம் போட்டுக்கொண்டிருப்பவர்கள் மட்டும்தான் நகைகள் வாங்குகிறார்கள் என்று சொல்லுவதற்கில்லை. அதிலும் இப்போது தங்கத்தின் விலை, 80 ரூபாய், 90 ரூபாய் என்று ஏறிக்கொண்டேயிருக்கிறது. சமுதாயத்திலுள்ள சாதாரண மக்களும் அவசரங்களில் தங்க நகை வாங்குகிறார்கள். அப்படி வாங்கும்போது இந்த வரியில்லாமல் தர முடியாதா என்று கேட்டால் வியாபாரிகள், வேண்டுமென்றால் பில் இல்லாமல் தருகிறோம் என்று சொல்லுகிறார்கள். ஏதோ வாங்கக்கூடியவர்கள் மீது ஏதோ பரிவு காட்டு வது போல, அவர்கள் பில்லும் கொடுக்கமாட்டார்கள். இதன் மூலம் வியாபாரிகள் அரசாங்கத்தை ஏமாற்றக்கூடிய முறைதான்

[Srimathi T. N. Anandanayaki] [9th September 1960

நடந்து கொண்டிருக்கிறது. இதனால் வியாபாரிக்கு நஷ்டம் கிடையாது. அவர்கள் சொன்ன விலையில்தான் கொடுக்கிறார்கள். வரியைத் தள்ளிக் கொடுக்கும்போது வாங்குகின்றவர்கள் வியாபாரி குறைத்துக் கொடுக்கிறார் என்று நினைக்கிறார்கள். அதனால் வியாபாரிக்கு ஒன்றும் நஷ்டம் கிடையாது. இதனால் நடுவில் இருக்கக் கூடிய அரசாங்கத்திற்குத்தான் நஷ்டம். வரி அதிகமாக இருப்பதால்தான் அவர்கள் அதிலிருந்து தப்பித்துக் கொள்ள வழி தேடுகிறார்கள். வரி குறைவாக இருந்தால் அரசாங்கத்திற்கு பணம் வந்து விடும்—வரியை கொடுத்து விடுவார்கள். வைரக் கம்மலுக்கு 7 சத வீதம் வரி போட்டிருக்கிறார்கள். இன்றைக்கு ஒரு ஜோடி வைரக் கம்மலை ரூபாய் 1,500-க்குக் குறைந்து வாங்க முடியாது. நூற்றுக்கு 7 ரூபாய் வீதம் வரியானது 105 ரூபாய் ஆகிறது. அதைப் பார்த்தவுடனேயே வைரக்கம்மலை வாங்குபவர்கள் மலைக்கிறார்கள். 1,500 ரூபாய்க்கு மேல் 105 ரூபாய் கொடுக்கவேண்டியிருக்கிறதே என்று மலைக்கிறார்கள். உடனே வியாபாரி 105 ரூபாயைத் தள்ளுபடி செய்துகொண்டு 1,500 ரூபாய் கொடுங்கள், வைரக் கம்மலை வாங்கிக்கொள்ளுங்கள் என்று சொல்லுகிறார். இதனால் ஏமாறுவது யார்? ஏழு சத வீதம் வரி பூராவும் அரசாங்கத்திற்குக் கிடைப்பதில்லை. இந்த நிலைமையை நீடிக்க விடுவது நல்லதல்ல. 1,500 ரூபாய் கொடுக்கக் கூடிய சக்தியுள்ளவர்கள் தானே வாங்குகிறார்கள். அவர்கள் கொடுக்கட்டுமே என்று எண்ணலாம். ஆனால் எவ்வளவு நெருக்கடியில் வாங்க வேண்டியிருக்கிறது என்று பார்க்கவேண்டும். அதிகமான பெண்களைப் பெற்றுவிட்டு, மாப்பிள்ளை தேடும்போது, வைரக் கம்மல் போடவேண்டும், வைர அட்டிகை போட வேண்டும் என்று கேட்கும்போது, பெண்ணைப் பெற்றவர் திண்டாடித் தெருவில் நிற்கும்போது, பெண்ணுக்கு எப்படியாவது கல்யாணம் ஆக வேண்டுமே என்று வைரக் கம்மலை வாங்கும் நேரத்தில் அந்தச் செலவோடு கூட அரசாங்கமும் சேர்ந்து வரியை போட்டால் அவர் பாடு எவ்வளவு கஷ்டமாக இருக்கும். கனம் அமைச்சருக்கு நிறையப் பெண்கள் இருக்கிறார்கள். அதை உணர்ந்து நிவர்த்தி செய்திருந்தால் இன்னும் கொஞ்சம் நன்றாக இருந்திருக்கும். அதிகப் பணம் இருந்து லக்ஷுரி ஆர்ட்டிகிள் வாங்குவதாக நினைக்கக்கூடாது. இப்போது இருக்கும் ஸோஷலிஸ்டிக் ஸ்டிரக்சரில் இது நெஸஸிடியாகப் போய் விட்டது. லக்ஷுரி ஆர்ட்டிகிள் என்பதை ஆண்கள்தான் நெஸஸிடியாகக் கொண்டு வந்து விட்டார்கள். ஏனென்றால் பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடும்போது ஆண்கள் தான் வைரக் கம்மல் போட்டால்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று சொல்லுகிறார்கள். ஆகையால்தான் வாங்கிப் போட வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. அரசாங்கம் இந்த வரியை ஒரே முனையில் போடுகிறார்கள். ஏழு சத வீதம் என்று இல்லாமல் ஒரு சத வீதம் அல்லது இரண்டு சத வீதம் போட்டால், முழுவதற்கும் மோசம் இல்லாமல் கொஞ்சமாவது வரும். இந்த முறையில் பெண்களைச் சேர்ந்த இந்தப் பொருள்களுக்குக்கெல்லாம் வரி விலக்குக் கொடுத்தால் அது ஆண்களுக்குத்தான் நல்லது. இதனால் ஆண்கள்தான் லாபம் அடைவார்கள். காரணம் என்னவென்றால் அவர்கள்தானே பெண்களுக்கு இதையெல்லாம் வாங்கிக் கொடுக்கவேண்டியிருக்கிறது. அமைச்சர் அவர்கள் சற்று யோசித்துப் பார்த்து தங்க நகைகளுக்கு வரியைக் குறைத்தால், கொஞ்சமாகத் தான் இருக்கிறது என்று வரியை தவிர்க்காமல் கொடுத்து விடுவார்கள். முழுவதும் மோசமாகப் போவதை விட கொஞ்சமாவது கிடைப்பதென்பது மேலானதாகும். அதோடு பூவுக்குக் கூட வரி இருக்கிறது. அதையும் விலக்க வழி தேடினால் வரவேற்கத் தக்கதாக இருக்கும் என்று கூறி முடித்துக்கொள்கிறேன்.

**SRI S. M. ANNAMALAI** : இந்த சட்ட மன்றத்திலே, விற்பனை வரிச் சட்டம் அமுலுக்கு வந்த பிறகு இரண்டாவது முறையாகத் திருத்தம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அமைச்சர் அவர்கள் சற்று யோசித்திருந்தால் பாலுக்குப் போட்டிருக்கும் வரியை எடுத்து விட்டிருக்கலாம். இந்த சட்ட மன்றத்தில் மசோதா வந்தபோது ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் பாலுக்கு வரி போடக்கூடாது என்று மிக மிக ஆர்வத்தோடு பேசினார்கள்.

9th September 1960] [Sri S. M. Annamalai]

ஆக இதை அமைச்சர் அவர்கள் நல்ல முறையில் சிந்தித்துப் பார்த்திருந்தால் பாலுக்கு வரி போடுவதைக்கூட நீக்கி விட்டிருக்கலாம். பாலுக்கு வரி போட்டதன் காரணமாக ஒரு படி பால் ரூ. 1–2–0 ஆக இருந்தது இன்றைக்கு ரூ. 1–4–0, ரூ. 1–6–0 ஆக ஆகிவிட்டது. ஒரு படி பால் ரூ. 1–6–0 ஆகியதன் காரணமாக அது யாரைப பாதிக்கிறதென்றால் பாமர மக்களைத்தான் மிகவும் பாதிக்கிறது.

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு படியின் விலை ரூ. 1 ஆக இருந்தால் அதற்கு வரி ஒரு நயா பைஸாதான். ரூ. 1–6–0 எப்படி ஆகிறது என்று எனக்குப் புரியவில்லை.

SRI S. M. ANNAMALAI : வேண்டுமானால் வரி ஒரு நயா பைஸாவாக இருக்கலாம். அதைச் சாக்கிட்டு ரூ. 1–6–0 என்று விற்கிறார்கள். வரி அதிகமாக ஆகிவிட்டது என்று சொல்லிக்கொண்டு அதன் மூலம் ரூ. 1–4–0, ரூ. 1–6–0 என்று விற்றுக்கொண்டிருக்கிறார்கள். அமைச்சர் அவர்கள் இதைச் சிந்தித்துப் பார்த்திருந்தால் பாலுக்கு வரி போட வேண்டிய அவசியம் வந்திருக்காது.

அடுத்து உணவு தானியங்களின் மீது போட்டிருக்கக்கூடிய ஒரு சத விகித வரி. உணவு தானியங்களை அதிகமாக உற்பத்தி செய்யவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிற நாம், விலை மேலும் மேலும் ஏறிக்கொண்டிருக்கிறது என்று சொல்லுகின்ற நாம், அந்த வரியை நீக்கி விட்டிருந்தால், கிராம மக்களோ அல்லது ஏழை மக்களோ உண்மையில் இந்த சர்க்காரைப் பாராட்டியிருப்பார்கள். இந்த மன்றத்தில் மசோதா ஆலோசிக்கப்பட்டபோது உணவு தானியங்களின் மீது போட்டிருக்கக்கூடிய வரி ½ சத வீதமாக இருந்ததை ஒரு சதவீதமாக ஆக்கினார்கள். வேண்டுமானால் பழையபடி ½ சத வீதம் என்று வைத்துக்கொள்ளுங்கள் என்று ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களும் மாற்றுக் கட்சியைச் சேர்ந்தவர்களும் பலமாக வாதாடினோம். திருத்த மசோதாவிலேயேகூட உணவு தானியத்தின் மீது இருக்கக்கூடிய வரியை நீக்கி விட்டிருக்கலாம். லாரி மூலமாக இன்றைய தினம் செல்வது பூராவும் உணவு தானியங்கள்தான். உணவு தானியங்களின் மீது வரி போட்டிருக்கும் காரணத்தினால்தான் இதிலிருந்து எப்படி தப்பித்துக்கொள்வது என்று லாரி சொந்தக்காரர்களும், லாரியை ஓட்டுபவர்களும் இன்வாய்ஸைக் காண்பிக்காமல், லாக் ஷீட்டைக் காண்பிக்காமல், டிரிப் ஷீட்டைக் காண்பிக்காமல் தப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு சத வீதம் என்று இருக்கக்கூடிய வரியை ½ சத வீதமாகப் போட்டிருக்கலாம், அல்லது வரியே இல்லாமல் செய்து விட்டிருக்கலாம்.

அதைப் போலவே அப்பளம். இப்போது இருக்கக்கூடிய சட்டப்படி பார்த்தால் அப்பளம் குடிசைத் தொழிலாக மாறி வருகிறது என்பதை உணரலாம். அப்பளத்திற்கு ஸிங்கிள் பாயிண்டில் 6 சத வீதம் வசூலிக்கிறார்கள் என்று அவர்கள் சங்கம் வைத்து அதன்மூலமாக சர்க்காருக்குக்கூட மனு அனுப்பியிருக்கிறார்கள். அவர்கள் கூறுவதெல்லாம் வேண்டுமானால் ஸிங்கிள் பாயிண்ட் டாக்ஸ் மூலம் 2 சத வீதம் வசூலித்துக் கொள்ளுங்கள் என்பதுதான். சர்க்காருக்கும் இம்மாதிரி மகஜர் அனுப்பியிருக்கிறார்கள். இன்றைக்கு இருக்கக்கூடிய சட்டத்தின் பிரகாரம் அப்பளத்திற்கு ஸிங்கிள் பாயிண்ட் டாக்ஸா அல்லது மல்டி பாயின்ட் டாக்ஸா என்று தெரியாமல் ஸிங்கிள் பாயிண்ட் டாக்ஸ் என்று 6 சதவீதம் வசூலித்து வருகிறார்கள். ஆறு சத வீதம் என்று இருப்பதை மாற்றி அவர்கள் சொல்லுவதைப் போல் ஒரு முனை வரி மூலமாக 2 சத வீதம் போட்டிருக்கலாம். இதை ஆலோசனை செய்து பார்த்து சட்ட மன்றத்தின் முன்னால் திருத்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கும்போது இப்படிப் பட்ட பொருள்களுக்கு வரி விலக்கு அளித்திருக்கலாம் அல்லது குறைத் திருக்கலாம்.

இப்போது கொண்டு வந்திருக்கக்கூடியது உண்மையிலேயே பாராட்டக் கூடியதுதான். பாலுக்கு நீக்கிவிட்டிருக்கலாம். அப்பளத்திற்கு வரியைக் குறைத்து தகருரைத் தீர்த்திருக்கலாம். அமைச்சர் இதையெல்லாம் சிந்தித்துப் பார்த்து ஆவன செய்யவேண்டுமென்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri S. LAZAR** : ஏற்கெனவேயுள்ள விற்பனை வரிச் சட்டத்திலே இன்னின்ன பொருள்களுக்கு மேற்கொண்டு வரி விலக்கு இருந்தால் நல்லது என்று சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டுப் பேசினார்கள். அந்த ரீதியிலே ஒரு முக்கியமான பொருளுக்கு விதி விலக்கு இருக்க வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். இப்போது பொதுவாக அரசாங்கத்தின் கொள்கை எந்த கைத்தறித் துணிக்கும் வரி விதிப்பு இருக்கக்கூடாது என்பது. அந்த முறையில் இன்றைக்கு நாட்டிலே, உற்பத்தி செய்யக்கூடிய கைத்தறித் துணி அத்தனைக்கும் வரி விலக்கு ஏற்பட்டிருக்கிறது. அரசாங்க உதவியினால் அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய சில சலுகைகள் காரணமாக குறிப்பாக சென்னை மாநிலத்தில், அதிலும் குறிப்பாக திருச்சி மாவட்டத்தில் கரூர் போன்ற இடங்களில் நல்ல ரக பெட்-ஷீட்டுகள், தலையணை உறைகள் உற்பத்தி செய்யப்படுவது எல்லோருக்கும் தெரிந்ததே. அவைகள் இப்போது நம்முடைய நாடு பூராவிலும் விற்கப்படுகிறது. அதோடு மட்டுமல்லாமல் வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. தலையணை உறையாகச் செய்யும் போது, தைத்து விட்டால் அதற்கு வரி, தையல் இல்லையென்றால் வரி கிடையாது. 6 நயா பைஸா கொடுத்து தைத்து விட்டால், அதற்கு 1½ அணு 2 அணு வரி கொடுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதை அவசியம் நீக்கிவிடவேண்டும். இந்த மாதிரி தைப்பது உற்பத்தி செய்யக் கூடிய இடத்திலேயே செய்யவேண்டிய காரியமே தவிர, தனிப்பட்ட முறையில் ரெடிமேட் சூட்ஸ் விற்கக்கூடியவர்கள் வாங்கி தைத்து விற்கக் கூடியதல்ல. அதற்கு வேண்டிய கண்ட்ரைவன்ஸஸ் அங்கே இருக்கிற காரணத்தினால் அங்கேயே தைக்க வேண்டியிருக்கிறது. அதற்கு வரி விலக்கு கொடுக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. அமைச்சரிடம் கூட டெபுடேஷன் வந்து பார்த்திருக்கிறார்கள்.

ஆகவே, அமைச்சர் அவர்கள் இதையும் கவனித்து இந்த விதி விலக்கில் இதையும் சேர்த்து விட்டால் மிகவும் நல்ல முறையில் இருக்கும். அதோடு இந்தச் சலுகை கைத்தறிக்காரர்களுக்குச் சென்று சேரும். இன்னும் அதிகமாக உற்பத்தி செய்து வெளி நாடுகளுக்குக்கூட "காம்பட்டிட்டிவ் ப்ரைஸ்"-ல் விற்க ஏதுவாக இருக்குமென்ற என் கருத்தை வலியுறுத்திச் சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : Every hon. Member wants to suggest something to be excluded from the purview of sales tax. There is no time. The Hon. Minister will now reply.

**The Hon. Sri R. VENKATARAMAN** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சாதாரணமாக இந்தத் திருத்த மசோதாவிலே என்ன திருத்தத்தைக் கொண்டு வந்திருக்கிறோமோ அதைப் பற்றித்தான் பேசுவது வழக்கம். இருந்தாலும் இது நம்மைப் பெரிதாகப் பாதிக்கிற காரணத்தால் எல்லோருடைய வாதத்தையும் ஓரளவு தெரிந்துகொள்வது நன்மையாக இருக்குமென்றுதான் நான் இந்தப் பிரச்னையை எழுப்பவில்லை. நாங்கள் கொண்டுவந்திருக்கும் திருத்தத்தை எல்லோரும் வரவேற்றிருக்கிறார்கள். அதற்காக என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்தத் திருத்தங்கள் எல்லாம் சட்டத்தை ஒழுங்குபடுத்தவும் நாம் செய்த பல காரியங்களை நிறைவேற்றவும் செய்த திருத்தங்களாகும். பாலுக்கு வரி விலக்கு கொடுக்க வேண்டுமென்று சொன்னார்கள். வரி விலக்கு கொடுக்க வேண்டுமென்று சொல்வது நிதி நிலைமையைப் பொறுத்த விஷயம். எந்தெந்தச் சமயத்தில் என்னென்ன காரியங்கள்

9th September 1960] [Sri R. Venkataraman]

செய்ய முடியும் என்பதைப் பொதுவாகப் பட்ஜட் தயார் செய்கின்றபோது பரிசீலனை செய்ய வேண்டும். இடையிலே வரி விதிப்பினால் நம் ராஜ்யத்தில் இருக்கும் வியாபாரம் வேறு ராஜ்யங்களுக்கு மாறிவிட்டாலும், நம்முடைய ராஜ்யத்தில் உற்பத்தியாகிற பண்டங்களை வாங்காமல் பிற ராஜ்யங்களில் இருந்துவருகிற பண்டங்களை வாங்குவதன் காரணமாக, நம்முடைய வியாபாரத்திற்குப் பாதகம் ஏற்பட்டாலும் உடனடியாக அது பற்றிப் பரிசீலித்து திருத்தங்களைச் செய்துகொண்டு வருகிறோம். அதே போல் உணவுப் பொருள் பற்றியும் சொன்னார்கள். இரண்டு சதவிகித வரியை ஒரு சத விகிதமாகக் குறைத்தோம். அதனால் விலை குறையவில்லை. நான் தெரிவித்துக்கொள்வது, இதை அரை சத விகிதமாகக் குறைத்தால்கூட உணவுப் பொருள்களின் விலை குறைந்து விடாது என்பதுதான்.

"க்ளாஸ் பாங்கிள்ஸ்"-க்கு வரியை எடுத்துவிட வேண்டுமென்று ஸ்ரீ விநாயகம் அவர்கள் மிக உருக்கமாக எடுத்துப் பேசினார்கள். எனக்கு அதைப் புரிந்துகொள்ளக்கூடக் கஷ்டமாக இருந்தது. விநாயகம் அவர்கள் ஏதாவது வளை போட்டுக்கொள்ளுகிறாரோ என்று நினைக்கும்படி இருந்தது. நான் சொன்னது போல் எந்தெந்தப் பண்டங்களுடைய வரிகளை எல்லாம் திருத்தியமைக்க வேண்டுமென்பதை பட்ஜட்டில் கவனிக்க வேண்டும். அப்பளத்திற்கு 2 சத விகிதந்தான் வரி. ஆனால் உணவுப் பொருள்களை "டின் செய்து, கான் செய்து அல்லது பாக் செய்து" விட்டால் 6 சத விகிதம் வரி. "பாக்" செய்து அப்பளம் வெளி இடங்களுக்கு அனுப்பப்படுகிற காரணத்தால் அதற்கு 6 சத விகிதம் வரி வந்து விட்டது என்று நினைக்கிறேன். மதிப்புக்குரிய கோமதிசங்கர தீட்சிதர் அவர்கள் பெரிய மகாநாடே போட்டு சர்க்கார் தப்பு செய்து விட்டது என்று பேசி இருக்கிறார்கள். எப்படித் தவறு ஏற்பட்டிருக்க முடியும் என்று நான் யோசித்துப்பார்த்தேன். இரண்டு சத விகிதந்தானே போட்டோம், எப்படி அதிகமாகி விட்டது என்று யோசித்துப் பார்த்தேன். இப்போது உள்ள நிலையைத் தவிர்க்க இதை எப்படித் திருத்தியமைப்பது என்பதைப் பரிசீலித்து திருத்துகிறேன்.

"ஹான்ட்லூம் பில்லோ கேஸஸ்" பற்றிச் சொன்னார்கள். சாதாரணத் துணியாக இருந்தால் வரி கிடையாது. சட்டையாகவோ, தலையணை உறையாகவோ தைத்து விட்டால் அப்போது அதற்கு விற்பனை வரி உண்டு. அவர்களுடைய பிரச்னை இந்த வரி விதிப்பில் ஆட்சேபணை ஒன்றும் இல்லை. லாசர் அவர்கள் இதைக் கவனிப்பார்கள் என்று நம்புகிறேன். அவர்கள் என்னிடத்தில் வந்து சொன்னதெல்லாம் வெளி ராஜ்யங்களுக்கு அனுப்பும்போது வரி வாங்குகின்றவர்களுக்கு "சி" பாரம் சர்டிபிகேட், சென்ட்ரல் சேல்ஸ் டாக்ஸ் ஆக்ட்பிரகாரம் கிடைக்கக்கூடிய சர்டிபிகேட் கிடைப்பதில்லை. வெளி ராஜ்யங்களில் டீலர்களாகத் தங்களை ரிஜிஸ்டர் செய்துகொள்ளவில்லையென்றால் அவர்களுக்கு 6 சத விகிதம் வரி போடப்படுகிறது. இது மிகவும் நியாயமானது. இதைச் சர்க்கார் பரிசீலித்துக்கொண்டிருக்கிறது. உள்நாட்டில் போடப்படுகிற 2 சத விகிதம் வரியைப்பற்றி ஒன்றும் குறை சொல்லமாட்டார்கள் என்று நினைக்கிறேன். நம்முடைய ராஜ்யத்தை விட்டு பண்டங்களை வெளி ராஜ்யத்திலும் விற்பனை செய்ய வேண்டுமென்ற லட்சியம் இருக்கும் காரணத்தால் அதையும் சர்க்கார் பரிசீலனை செய்யும் என்று தெரிவித்துக்கொண்டு, இந்த மசோதாவிற்கு ஆதரவு கொடுத்ததற்காக என்னுடைய நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI K. VINAYAKAM: May I know the rate of taxation in Mysore? Is it not 2 per cent whereas it is 6 per cent here? The result is this. Because of the excessive taxation here on bangles, and glass beads the wholesalers finding it miserable to continue here

with excessive taxation have almost migrated to Mysore State and shifted their business to Bangalore to transact business there. As such our finance has dwindled in the sense we do not get as much remuneration by way of sales tax as it used to be the position before. As such will the Government revise their opinion and have this tax on bangles and glass beads waived, if possible.

THE HON. SRI R. VENKATARAMAN: My reply was with regard to exemption. Whatever difficulties there are in inter-State trade will certainly be looked into by Government.

DEPUTY SPEAKER: The question is—

"That the Madras General Sales Tax (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 25 of 1960) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2 to 13 were put and carried.

*New Clause 14.*

THE HON. SRI R. VENKATARAMAN: Sir, I move—

That after Clause 13, *add* the following clause:—

"14. *Amendment of the Second Schedule, Madras Act I of* **1959.—In** the Second Schedule to the principal Act, for item 6 and the entries relating thereto, the following item and entries shall be substituted, namely:—

| | | | |
|---|---|---|---|
| 6 (*a*) | Oil seeds, other than cardamom and groundnut, that is to say, seeds yielding non-volatile oils used for human consumption or in industry or in the manufacture of varnishes, soaps and the like or in lubrication and volatile oils used chiefly in medicines, perfumes, cosmetics and the like. | Do. | 2 |
| (*b*) | Cardamom .. .. .. .. | At the point of first purchase in the State. | 2 |
| (c) | Groundnut .. .. .. .. | Do. | 1" |

9th September 1960]

DEPUTY SPEAKER : The question is—

After Clause 13, *add* the following clause :

" 14. *Amendment of the Second Schedule, Madras Act I of* 1959.—In the second Schedule to the principal Act, for item 6 and the entries relating thereto, the following item and entries shall be substituted, namely :—

| | | | |
|---|---|---|---|
| 6 (*a*) | Oil seeds, other than cardamom and groundnut, that is to say, seeds yielding non-volatile oils used for human consumption or in industry or in the manufacture of varnishes, soaps and the like or in lubrication and volatile oils used chiefly in medicines, perfumes, cosmetics and the like. | Do. | 2 |
| (*b*) | Cardamom .. .. .. .. | At the point of first purchase in the State. | 2 |
| (*c*) | Groundnut .. .. .. .. | Do. | 1" |

New clause 14 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move :

" That the Madras General Sales Tax (Amendment) Bill, 1960, as amended, be passed."

DEPUTY SPEAKER : The question is :—

" That the Madras General Sales Tax (Amendment) Bill, 1960, as amended, be passed."

The motion was put and carried and the Bill as amended was passed.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

The House then adjourned. 1-30 p. m.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### *A .—Statutory Rules and Orders.*

136. *Amendment to Rule* 78 (*a*) (i) *of the Madras Commercial Crops Markets Rules*, 1948, *issued in G.O. Ms. No.* 2752, *Food and Agriculture, dated 9th August* 1960. [*Laid on the Table of the House under Section* 18 (4) (*c*) *of the Madras Commercial Crops Markets Act*, 1933 (*Madras Act XX of* 1933).]

### *B.—Reports, Notifications and other papers*

**Nil.**

APPENDIX I.

[Vide answer to starred question No. 558 asked by Sri T. S. Ramaswami at the meeting of the Legislative Assembly held on 9th September 1960, page 500 supra.]

I

*ist of other Backward Classes recognized for Government of India scholarships for Madras State excluding Kanyakumari district and Shencottah taluk o Tirunelveli district.*

1 Agamudaiyans (including Tuluva Vellala).
2 Agasa
3 Ambalakaran.
4 Annadan.
5 Are Maharati.
6 Atagara.
7 Archukatlavandu.
8 Badaga.
9 Balolika.
10 Battada.
11 Bestha (Jalarulu, Nagavaddilu).
12 Bhandari.
13 Bhottadas-Bode Bottada, Muria Bota la-and Sano Bhottada.
14 Bhumias-Bhuri Bhumia and Bado Bhumia.
15 Billava.
16 Bissoy.
17 Bondil.
18 Boya.
19 Byagari.
20 Chaptogara.
21 Chatadi (Cattad Srivaishnava).
22 Dasari.
23 Devadiga.
24 Devalkar
25 Devanga.
26 Dhakkada.
27 Dombo.
28 Dombs-Andhiya Dombs, Audiniya Dombs, Chonel Dombs, Christian Dombs, Mirgani Dombs, Ponaka Dombs, Telaga and Ummia.
29 Dommara.
30 Dudekula.
31 Eravallan or Eravallar
32 Galada Konkani.
33 Gandla.
34 Gangavars.
35 Ganika (including Nagavamsam).
36 Gatti.
36-A Gavara.
37 Godaba.
38 Gondi-Modya Gond and Rajo Gond.
39 Gondo.
40 Gowda (including Gamalla or Kalali).
41 Goudus, Bato, Bhirithya, Dodhokouria, Hato, Jatako and Joria.
42 Gudigara.
43 Hegde.
44 Holva.
45 Idiga (including Setti-Balija)-Setti Balija pupils not to be considered eligible for scholarships unless they belong to *Idiga* community.
46 Isai Vellalar (Melakarar).
47 Illuvan (Ezhuvan).
48 Irulas.
49 Jadapus.
50 Jakkulas (Guntur district).
51 Jandara.
52 Jangam.
53 Jhetty.
54 Jogi.
55 Kabbara.
56 Kodalo.
57 Kadan.
58 Kaikolan (Sengunthar).
59 Kalavanthula.
60 Kalingi
61 Kallan.
62 Kammalans (Kamsalas Viswabrahmans and Viswakarma).
63 Kanior Kaniyan and Kanisu or Kaniyar Pannikkar.
64 Kannadiyan.
65 Karikalabhaktulu.
66 Karnibhaktulu.
67 Kasaba.
68 Kavuthiyan.
69 Kolasi.
70 Kharvi.
71 Khatri.
72 Khattis Khatti, Kemmaras & Lohara.
73 Kohdala.
74 Kodu.
75 Kolaries or Muniyanies.
76 Kommar.
77 Kongu.
78 Koppalavelamas.

9th September 1960]

79 Koracha.
80 Kosalya Goudus, Bosothoriya Goudus, Chitti Goudus, Dangayath Goudus, Boddu Komariya, Dudu Kamaro, Ladiya Goudus and Pulloseriya Goudus.
81 Kotayar.
82 Kududi.
83 Kulala.
84 Kuruba.
85 Kurumba.
86 Labbai.
87 Lambadis.
88 Madivala.
89 Madugar or Medavar.
90 Mahendra (Medara).
91 Mahratta (Non-Brahmin).
92 Malaiali.
93 Male.
94 Magatha Goudus, Bernia Goudu, Boodo Magatha, Dongeyath Goudu, Ladya Goudu, Ponna Magatha and Sana Magatha.
95 Mangala.
96 Mappilla.
97 Maravar.
98 Maruthuvar.
99 Maune.
100 Melakudi or Mudiyan.
101 Modi Banda.
102 Mogaveera.
103 Moili.
104 Moniagar.
105 Muduva.
106 Muli or Muliya.
107 Mukhari.
108 Mukuvan or Mukeyan alias Mogayan (including Bovis).
109 Muria.
110 Muthiriyar.
111 Muthuraja.
112 Mutracha.
113 Muttiriyan.
114 Nagaram.
115 Nakkala.
116 Namdev Maharatta.
117 Odden (Donga).
118 Odde (Vodde or Vadde or Veddai).
119 Odiya.
120 Oiulu.
121 Ojulus or Metta Komasalies.
122 Omanaito.
123 Oriya.
124 Padayachi (Villiyan Kuppan).
125 Padmasali.
126 Painda.
127 Paigarapu.
128 Palli (Jalarulu, Nagavaddilu).
129 Palasi.
130 Pamula.
131 Pattusali.
132 Pangadikara.
133 Panniyar or Pannayar.
134 Parakavakulam (Surithiman, Malayaman, Nathaman, Moopanar and Nainar).
135 Paravatharajakulam.
136 Patnulkaran.
137 Pattanavan.
138 Penties.
139 Perike.
140 Perike Balija.
141 Peruvannan.
142 Picchigunta.
143 Poraya.
144 Pulluvan.
145 Puragiri Kshatriya.
146 Pusala (Pusalavadu).
147 Rajaka.
148 Rajapur.
149 Rangaraju community in Markapur Division of the Kurnool district.
150 Reddi (Ganjam).
151 Sadhu Chetty (including Telugu Chetty or 24 Mana Telugu Chetty).
152 Sagara.
153 Sale.
154 Sali.
155 Saliyan.
156 Sedan.
157 Seerithi Goudus.
158 Senaithalaivan Goudus (Senaikudayan).
159 Senapathulu.
160 Setti Balija (in Visakhapatnam, East Godavari, West Godavari and Krishna districts).
161 Siviar.
162 Sourashtra.
163 Srisayana.
164 Tatapu.
165 Telikula.
166 Thegata (Veerakshatriya).
167 Thogata.
168 Tholuva-Naicker and Vettala kara Naicker.
169 Thoriyan.
170 Thurpu Kapus.
171 Tigala (Tigla).
172 Thondaman.
173 Uppara.
174 Ural Goundan.
175 Vada Balija or Ganjam and Visakhapatnam.
176 Vaduvan (Vadugan).

177 Vakkiliga.
178 Vaiaian.
179 Vainar.
180 Vannan.
181 Vanniyakula Kshatriya Agnikula Kshatriya Vennekapu Venne Reddi Pallekapu and Palle Reddi (in Telugu districts.)
182 Valakatalavan.
183 Veluthadan.
184 Virakodi Vellalars.
185 Vathis.
186 Yadava.
187 Vettuvan.
188 Kanakkan in areas other than Nilgiris district where it is recognised as a Scheduled Tribe.
189 Panan.
190 Paravan.
191 Valmiki.

*List of communities subsequently approved by the Government of India for award of Government of India scholarships.*

1 Ambika.
2 Andipandaram.
3 Bhatraju.
4 Eravallar.
5 Gramani—Shanan.
6 Jambuvanodai.
7 Kongu Chettiar of Coimbatore.
8 Kuravan.
9 Kuruhini Chetty.
10 Kunnuvar Mannadi.
11 Mond-golla.
12 Mutlakampatti.
13 Narikoravan.
14 Navudian.
15 Nokka.
16 Pannan Vettuva Gownder.
17 Parel Madivala.
18 Sozhia Chetty.
19 Telugupatty Chetty.
20 Thottia Naicker.
21 Vettaikaran.
22 Vettuva Gounder.
23 Vilkurup.
24 Yoggeeswara.

II

*List of other Backward Classes recognized for Government of India scholarships for Kanyakumari district and Shencottah taluk of Tirunelveli district.*

1 Aryan (Nulayan).
2 Arayavathi (Nairuseri).
3 Alwar.
4 Anglo-Indian.
5 Agasa.
6 Ambalakaran.
7 Are Maharati
8 Arya (South Kanara).
9 Atagara.
10 Boyan.
11 Bezhtha (Jalarula, Nagavadilu).
12 Bhandari.
13 Billava.
14 Chavalakaran.
15 Chakkala.
16 Chetties.
17 Chedan.
18 Chaptogara.
19 Devadasi (Saraswatha Non-Brahmin).
20 Devangan.
21 Devadiga.
22 Ezhavathi (Vathi).
23 Ezhava (Ezhuva Illuvan).
24 Ezhuthachan.
25 Gouda (including Gammala or Kalali).
26 Galada Konkani.
27 Ganika (including Nagavamsam).
28 Gatti.
29 Hegde.
30 Irulas.
31 Jews.
32 Jogi.
33 Kumbaran.
34 Kusavan.
35 Kudumbi.
36 Kalari Kurup or Kalari Panicker.
37 Kerala Muthali.
38 Kallan.
39 Kaikollan (Sengunthar).
40 Kannada Chetty.
41 Kaniyan alias Ganaka (Kanior, Kanisu, Kaniyar Panicker).
42 Kadupattan (Malabar).
43 Kammalan (Kamsalas, Viswabrahmans and Viswakarma).
44 Kannadiyan.
45 Kavuthiyan.
46 Khatri.

9th September 1960]

47 Kolaries or Muniyanies.
48 Koteyar (Kshatriya or South Kanara).
49 Kulala.
50 Kuruba.
51 Kurumba.
52 Latin Catholics.
53 Muslims (Mappila, Jonakan and Methan).
54 Maravan.
55 Mad vala.
56 Madugar or Medavar.
57 Mahar tta (Non-Brahmin).
58 Marati or South Kanara (Hill Tr be).
59 Mogavee.
60 Moili.
61 Mukkuvan or Mukayan alias Mogayan (including Bovis).
62 Mukhari.
63 Male.
64 Melakudi or Kudiyan (except in Malabar district).
65 Naicken.
65-A Nadar (Hindus and Christians).
66 Naidu.
67 Odan.
68 Ottanaicken.
69 Perumkollam.
70 Pandithar (Ampattan, Pranopakari and Nasivan)
71 Paramban.
72 Pandi Thattan.
73 P thukudi.
74 Padmasali.
75 luvan.
76 ju.
77 Sakravar (Kavathi).
78 Salian (Pattaryan).
79 Senaithalavar (Elavaniya).
80 Saiva Vellalan.
81 Tholkollam.
82 Thondaiman.
83 Thandal Vannan.
84 Thottiyar.
85 Telugu Chetty.
86 Tamil Chetty.
87 Tamil Pillai.
88 Thunnan.
89 Tarakan.
90 Thiyya community of Malabar area (including Kasargod).
91 Uppara.
92 Valan.
93 Veerasiva (Pa daram, Vairavi, Vairagi, Yogiswarar Matapathi).
94 Velaan.
95 Veluthedathu Nair (Veluthadan).
96 Viswakarmala (Pandi Kammala, Malayala Kammala, Kannan or Musari, Kalthachan or Kallasari, Kollan, Thachan or Asari, Thattan, Villasan or Vilkurup).
97 Vilakkathala Nair (Velakkathalavan).
98 Vaniyan or Vaniar (Vanika, Vanika-Vaisya, Vaisyachetty, Vanibha Chetty, Ayiravar and Nagarathar).
99 Vadukan (Vaduvan, Vadugan).
100 Vellala Pillai (Nanjinad Vellala).
101 Va syas.
102 Vakkliga.
103 Yadava (Konar).

NOTE.—All Scheduled Castes converted to Christianity or Buddhism will be treated as other Backward Classes for the purpose of award of Government of India scholarships.

APPENDIX II.

[Vide answer to starred question No. 569 asked by Sri A. Vedarathnam at the meeting of the Legislative Assembly held on 9th September 1960, page 512 supra.]

Representations have been received by Government that the method adopted for the valuation of lands offered as security for loans issued by Land Mortgage Banks on the basis of pre-war values was too stringent and that sanction and disbursement of these loans took a lot of time especially due to delay in the issue of encumbrance certificates and registration of mortgage deeds by Sub-Registration Officers. So far as the valuation of lands offered as security is concerned, Government have since ordered that such lands should be valued with reference to the average market value

[9th September 1960

of similar lands sold in the vicinity during the five years preceding the date of applications and that Land Mortgage Banks should advance loans up to 50 per cent of the value so arrived at for direct land improvement and up to 40 per cent of the value for the discharge of prior debts. Instructions have also been issued to the officers of the Registration Department that there should be no avoidable delay on the part of the Sub-Registration Offices either in issuing encumbrance certificates or in registering documents, presented by co operative institutions or parties taking loans from them. The question as to how the existing procedure for the issue and disbursement of loan by Land Mortgage Banks could be simplified to enable the issue o loans within the minimum possible time is also under active consideration.

## Appendix III.

[Vide answer to starred question No. 573 asked by Sri P. G. Manickam at the meeting of the Legislative Assembly held on 9th September 1960, page 516 supra.]

(அ) Licences have been granted by the Government of India to the following undertakings in this State for the manufacture of radio receivers, components required for radios and electronic appliances :—

| *Name of the industrial undertaking.* | *Products.* | *Capacity licensed.* |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| 1 Messrs. Resa Company, 3/16, Mount Road, Madras. | (1) Radio receivers | 3,000 Nos. per annum. |
| | (2) Components required for meeting internal requirements for the production of 3,000 numbers of radios :– | |

| *Name of the components.* | *Annual capacity.* |
|---|---|
| (1) | (2) |
| | Nos. |
| Main transformers .. .. .. | 3,600 |
| L.T. transformers and chokes .. | 7,200 |
| Coil R.F. and I.F. .. .. .. | 14,400 |
| Mechanical parts, drums brackets, etc. | 9,600 |
| Chasis .. .. .. .. | 3,600 |
| Cabinets—wooden, steel .. .. | 3,600 |

*Radio components for sale.*

| | |
|---|---|
| Main transformers .. .. .. | 4,800 Nos. per annum which will be in addition to the components specifically mentioned in (2) above. |

Licence granted on 21st May 1958.

9th September 1960]

| *Name of the industrial undertaking.* | *Products.* | *Capacity licensed.* |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| 2 Messrs. G. Janshi and Company, 2/173, Mount Road, Madras-2. | Radio receivers | 3,000 Nos. per annum. |
| Licence granted on 24th December 1957. | | |
| 3 Messrs. Electronic Industries, Industrial Estate, Guindy, Madras-16. | (1) Volume controls and tone controls. | 520,000 Nos. per annum. |
| | (2) Amplifiers | 500 ,, |
| | (3) Car radios | 275 ,, |
| | (4) Transistor radios | 150 ,, |
| Licence granted on 10th March 1960. | | |

(ஆ) No firm has applied for licence to manufacture these articles in 1960.